# ஸ்ரீ [illegible] சரித்திரம்




சுவாமி விசாலானந்தர்

வாசவி நகர் திருப்பதி



விற்பனை உரிமை

பூர்ணிமா பப்ளிகேஷன்ஸ்

ஏ இ-33, 7-வது குறுக்கு சாலை

அண்ணா நகர், சென்னை-600 040.

# விசுவாமித்திரர்

ஆசிரியர்
தா. செ. இரகுபதி, B.A. (Eco.) M.A. (Tamil) Ph.D.
(விசாலானந்தன்) P.G. Dip. in Linguistics
இணைப் பேராசிரியர்
தமிழ்த்துறை, திருவேங்கடவன் பல்கலைக் கழகம்

விற்பனை உரிமை
பூர்ணிமா பப்ளிகேஷன்ஸ்
ஏ. இ. 33, 7வது குறுக்குச் சாலை,
அண்ணா நகர், சென்னை - 600 040

மொத்த பிரதிகள் : 1000
முதல் பதிப்பு : ஆகஸ்ட்டு 1995


விலை : ரூ. 40

(இந்த விசுவாமித்திரர் என்னும் நூல் திருப்பதி தேவஸ்தானம் அளித்த நிதி உதவியினால் அச்சிடப்பட்டது என்பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.)

# குறிப்புரை

இந்து சமய வரலாற்றை விளக்கவல்ல காவியங்களில் இராமாயணமும் ஒன்று. இதில் விசுவாமித்திரர் வரலாறு தெளிவாக உள்ளது. முதலில் விசுவாமித்திரர் ஒரு அரசராகத் தான் இருந்தார். வசிட்ட முனிவரைக் காணக் காட்டிற்குச் செல்லும் அவர், பசு ஒன்றைக் கேட்கப் போய்ப் போர் ஒன்று விளைகிறது. அப்போது பசு கிடைக்கப் பெறாத அவர், துறவியாக ஆகத் துணிவு கொள்கிறார். அவருடைய முயற்சிகள் படிக்கவும் எண்ணவும் சுவை உடையன ஆகும். இளைஞர் சமுதாயத்திற்கு அவருடைய வாழ்க்கை ஒரு வழி காட்டி போல அமைகிறது என்று கூறலாம். எதையும் வீரத் தோடு எண்ணி, துணிவோடு கூறி, அஞ்சாமையோடு செய்து முடித்த வாழ்வு அவருடையது ஆகும். சபலா பசு கேட்டல் இக்காவியத்தில் உள்ளது. 'சேலன்ஜிங்' என்று ஆங்கிலத்தில் கூறுவதுபோல் விசுவாமித்திரர் 'எதிர்முறைப்' பார்வையில் வாழ்க்கையை அணுகி வென்ற துறவி.

இராமாயணத்தில் கிடைத்த சில துளிகளைச் சேர்த்து இக்காவியத்தைப் படைத்திருக்கிறேன். இராமாயணத்தில் இல்லாத 'மங்கை' என்னும் பெண் பாத்திரம் ஒன்றையும் வேறு சில புதிய பாத்திரங்களையும் காவிய அழகுக்காகச் சேர்த்திருக்கிறேன். அவை முழுவதும் கற்பனை அடிப்படை யில் செய்யப்பட்ட முயற்சிகளே ஆகும். சில தேவையான மாற்றங்களையும்கூட காவிய 'தீம்' பற்றி மாற்ற வேண்டிய தேவை ஏற்பட்டது. கம்பர், பாரதி போன்ற மாபெருங்

கவிஞர்கள்கூட அத்தகைய மாற்றங்களைத் தங்களுடைய காவியங்களில் செய்திருக்கிறார்கள் என்னும் கருத்துக் கூர்ந்து நோக்குதற்குரியது ஆகும்.

காவிய அமைப்பிலும் கூட வருணனைப் பகுதிகளில் கற்பனைப் பகுதிகள் குறைக்கப்பட்டு நடைமுறை—எளிய *Practiocal and Plain* வருணனை முறைப் பின்பற்றப் பட்டுள்ளது.

'விசுவாமித்திரர்' என்னும் இச் சிறு காவியத்திற்கு ஆன்றோரும் சான்றோரும் இளையோரும் ஆதரவளித்து வளர்க்க வேண்டுமென்று வேண்டுகிறேன்.

அன்புடன்,

விசாலானந்தர்

## இறைமை

நெஞ்சில் கனிந்தனள்; நேர்மை வடிவினளே!
தஞ்சம் எனக்கூறித் தாழ்ந்துவிட்டேன்—பிஞ்சுமனம்
அஞ்சும் எனைக்காக்கும், அன்னையவள்; சக்தியவள்!
எஞ்ஞான்றும் தாளதனை ஏற்று!

## காலை

வானமெலாம் தேவர்கள் தேரில் ஏறி
வழிகிழித்துச் சென்றதனால், கிழக்கின் ஓரம்
ஆனவரைக் கதிர்பரப்பிப் பார்த்து விட்டு
அடக்கமுடன், கதிரவனும் ஓரம் நின்றான்!
தேனடைகள் உடைந்தாற்போல் சிவந்த அந்தத்
தெளிவான நிறவோட்டம் தெரிந்த தங்கே!
மோனத்து வடிவமது முழுமை பெற்று
மௌனமுடன் உறங்கிற்று! நாட்டின் ஓரம்.

கம்பளங்கள் ரத்தினத்தால் ஆக்கி வைத்துக்
கடைசிவரை விரித்தாற்போல் வானில் காட்சி!
எம்முறையில் எவ்வழியில் பார்த்தால் கூட
ஏற்றினவே ஒளிக்கீற்று வானில்; அங்கே
'கம்'மென்று மலர்மணமும் காற்றில் வீசக்
காலத்தின் புதுக்கோலம் கலந்து நிற்கும்!
கம்பளத்து முனையோரம் கவினாய்ச் சார்ந்து
கார்மேகம் தொங்கியது! கண்ணின் முன்னால்!

முத்தெடுத்துச் சேர்த்தாற்போல் மூலை தன்னில்
முடிவில்லா ஒளிபுள்ளி, நடுவில் பார்த்தால்
தத்தளித்துத் திரிகின்ற மேகக் கூட்டம்!
தானடங்கிச் சிரித்துவிடும் மினிகள் கூட்டம்!

கொத்தெடுத்து மலரதனைத் தூவி விட்டால்
 கொல்லென்று சிதறல்போல், விண்ணில் எங்கும்
வித்தகமாய் மின்மினிகள் விழிசி மிட்டி
 விளையாடி மகிழ்ந்தனவே! காலை நேரம்! 3

நடைக்கட்டும் நேரமது! நாலு மங்கே
 நலம் விழைந்து மாந்தரெலாம் நடக்க லுற்றார்!
மடைதிறந்த வெள்ளம்போல், கோட்டை யுள்ளே
 மனிதர்களின் மென்பேச்சு வளர்ந்த தங்கே!
அடைத்திருந்த அக்கோட்டைக் கதவும் மெள்ள
 அமைதியுடன் திறந்ததினால் ஆர வாரம்!
படையுண்டு வீரரெலாம் குதிரை ஏறிப்
 பறந்தனரே கடமைகளை ஆற்ற அங்கே! 4

## நாட்டு வளம்

நாட்டினிலே வளமுண்டு; அழகும் உண்டு;
 நங்கையரின் பரதங்கள் பலவும் உண்டு!
கூட்டினிலே கிளிக்கூட்டம் குலவல் உண்டு!
 குவிந்திட்ட மலர்ச்சோலை வாவி உண்டு!
மேட்டினிலே வயல்வரப்பில் உழவர் கூட்டம்
 மெழுகெனவே மண்ணதனை உழுதல் உண்டு!
கோட்டானைப் பகலினிலே காக்கை கூட்டம்
 கொல்லுகிற காட்சியுண்டு! நாடே அன்றோ? 5

கற்பினிலே ஆழ்ந்திருந்த பெண்கள் எல்லாம்
 கடைவாயில் அருகினிலே கோலம் போட்டார்.
பொற்பினிலே ஆழ்ந்திருந்த அவர்கள் கூடிப்
 பொழுதெல்லாம் தெய்வீகம் பாடி வந்தார்.
அற்புதமாய் அயோத்தியெனும் நாட்டில் எங்கும்
 ஆண்மைமிகு வீரர்களும் வாழ்ந்து வந்தார்.
கற்பனைக்கும் எட்டாத ஆயு தங்கள்
 கரம்பற்றிப் போர்ப்பயிற்சி செய்து வந்தார். 6

உலைகூடம் நிரம்பியது; வாளும் வேலும்
உராய்ந்ததனால் முனைமடிந்து வீழ்ந்த தாலே,
அலையலையாய் அடிக்கின்ற ஓசை பொங்கி
அந்நாட்டில் பரவியது! வீர ரன்றோ?
கலைவாணர் அனைவருமே வீதி யோரம்,
கற்கோட்டை மதிலோரம், கோயிலோரம்,
மலையோரம் கரையோரம் சிலம்பம் ஆடி
மங்கையரின் பாதமுடன் போட்டி இட்டார்! 7

நீள்கோட்டை வழியுண்டு; அகழி யுண்டு!
நீங்காத அகழிக்கரை வீரர் உண்டு;
ஆள்மறைக்கும் மதில்சுவர்கள் ஓங்க உண்டு!
ஆமங்கே யானைப்படை நகர்தல் உண்டு!
தேள்கொடுக்கின் முனைபோல, கோட்டை மீது
தெரிந்துவிடும் ஆயுதங்கள்! காவல் அன்றோ?
மாய்வதற்கே அஞ்சாத வீரர் கூட்டம்
மன்னர்களை வாழ்த்தும் ஒலி அங்கே உண்டு! 8

பலிபீடம் தான்உண்டு; படையின் வீரர்
பகைவர்களை வெல்வதற்குப் பலியின் முன்னால்,
நலியாத நெஞ்சோடு வாளை ஏற்று
'நங்' கென்று கழுத்தினையே வெட்டிக் கொண்டு
பலியாகி வீழ்கின்ற காட்சி யுண்டு!
பாவையவர் அது கண்டு மகிழ்தலுண்டு!
பலிவாங்க பலிகொடுத்துப் பகைவர் வீழ
பலமுழக்கம் செய்திடுவர் வீரர் கூட்டம்! 9

புதுமைமிகு கட்டிடங்கள்; முற்றத் தோடு
பூத்தனவே நாட்டினிலே! பூவை மாதர்
சதுராடி நிலாமுற்ற முனையின் ஓரம்
சல்லாபக் காட்சியிலே ஆழ்த லுண்டு!

பதுமஅடி தரையினிலே தாவி ஆட
பலராகம் இசைக்கருவி பொழிந்து தள்ள
கதுப்பெல்லாம் சிவந்துவிட இல்லம் தோறும்
காதல்வழி நடந்ததுவே! பண்பின் ஆட்டம்! 10

கற்புண்டு ஒருபுறத்தில்; காதல் கூடக்
கற்போடு ஒருபுறத்தில் கூடல் உண்டு!
குற்றமிலா வீரரது வாழ்வால் அங்கே
குறையில்லா வீரமும்தான் உண்டு! உண்டு!
கற்புடைய மகளிர்கள் வீரம் காட்டிக்
'கற்கோயில், வழிபட்டார்; வாள்வீ ரர்கள்
தற்காப்பில் வென்றிடவே களத்தைச் சேர்ந்து
தளராது 'கற்கோயில்' வணங்கி வந்தார்! 11

நாட்டினிலே மகிழ்ச்சியது கடலாய் ஆகி
நகர்ந்திடவே மக்களெலாம் கலையில் மூழ்கி
கூட்டமதில் அங்கங்கே குலவ லுற்றார்!
கூடலிலே அங்காடி ஒளிர்ந்த தங்கே!
ஆட்டங்கள் பலஉண்டு; அதுவும் கூட
அழகான கட்டிடத்தில் கலையின் ஆர்ப்பே!
பாட்டுக்கள் பலஉண்டு; அதிலும் கூடப்
பக்திவழி பரவசமே பொழிந்த தங்கே! 12

போதும்எனும் பொன்மனதைப் பெற்றுக்கொண்டு
பொல்லாப்பு இல்லாமல் மனிதர் வாழ்ந்தார்
வாதுக்கள் வம்புகளும் இல்லை! இல்லை!
வழிப்பறிகள் கொள்ளைகள் இல்லை! இல்லை!
சாதுக்கள் இருந்ததினால் 'போதும்' என்னும்
சத்தியத்தின் பெருங்கொள்கை வாழ்ந்த தங்கே!
மாதுளத்தின் சுவையுண்டு; ஆனால் கூட
மக்களதைப் பகுத்துண்டு வாழ்ந்து வந்தார்! 13

பெண்டிர்கள் கற்போடு வாழ்ந்து வந்தார்!
 பெருங்கயவர் கூட்டங்கள் வந்த போதும்,
பெண்களெலாம் அஞ்சாது வீரம் காட்டிப்
 பெரும்பண்பாய் வாழ்ந்தார்கள்! தமிழின் ஆற்றல்!
தன்மைமிகு சங்கத்துப் பெண்டிர் அன்று
 தண்முறத்தால் புலிஓட்டி வாழ்ந்தார் என்று
எண்ணத்தில் பல உண்டு; ஆன்றோர் கூறி
 எடுத்ததனைக் காட்டிடுவார்! நாடே அன்றோ? 14

படைசேர்ந்த ஆட்சியது! பலவும் சேர்ந்து
 பகைப்பினையே அளிக்கின்ற கூர்மை மிக்க
நடைபோடும் வீரர்கரம் உண்டு உண்டு!
 நன்மைமிகு போர்க்கொடியும் பறத்தல் உண்டு!
கடைவாயில் கோட்டையதில் ஆயு தங்கள்
 கரம்பற்றி, இடைசெருகி வீரர் எல்லாம்
படைகாக்க, பல முழக்கம் வீரம் காட்டிப்
 பார்வெல்ல இயங்குவதும் அங்கே உண்டு! 15

முற்றுகையில் பல பகைவர் ஆழ்ந்தால் கூட
 முடிப்பதற்கே முடியாத கோட்டை உண்டு!
கற்றுணர்ந்த வீரர்களால் கல்லும் கூடக்
 கடைவழியில் தற்காப்பாய் நிற்றல் உண்டு!
பற்றில்லா வீரமது! வெறியும் கூட!
 பண்டைவழி மரபுடனே வீரம் காக்கக்
குற்றமதே இல்லாமல் துள்ளித் துள்ளிக்
 கூவுகிற வீரமது! வெல்லல் ஆகா! 16

ஆட்சிக்குக் குழுவுண்டு; ஆன்றோர் உண்டு;
 ஆளுகைக்குப் பலவழிகள் அங்கே உண்டு!
காட்சிக்கு எளியர்களாய்க் கடுஞ்சொல் நீக்கிக்
 கண்ணோடி, கள்ளத்தை ஒற்றால் ஒற்றி,

நாட்டியொரு அறவழியை, அஞ்சா தங்கே
நலிவுகளை வறுமைகளைப் போக்கிப் போக்கிக்
கூட்டினிலே வாழ்கின்ற பறவை போலக்
கொடியேற்றி வாழ்ந்திடுவர்! வாழ்க்கை அன்றோ? 17

## காட்டு வளம்

நாட்டுக்குப் புறத்தினிலே காடும் உண்டு!
நாடெல்லாம் போற்றுகிற அடர்ந்த காடு!
பாட்டுண்டு; பறவைகளின் பாட்டே ஆகும்!
பதைப்புண்டு, பால்கறவை பதைப்பே ஆகும்!
வேட்டுண்டு; புலிகளது வேட்டே ஆகும்;
வேலியுண்டு; மாமுனிவர் தவமே ஆகும்!
வாட்டிவிடும் வெள்ளமது உண்டு; உண்டு!
வளமளிக்கும் யாகவழி வெள்ள மாகும்! 18

கொடியுண்டு; வேடுவர்கள் மங்கை எல்லாம்
கொடியாகி நகர்தலுண்டு; ஆடு உண்டு!
கடிதான மலைச்சோலை ஆட்ட மாகும்!
கலையுண்டு; கலைமானின் ஓட்ட மாகும்!
வெடியுண்டு; வேட்டுவரின் யானை வேட்டை
வெடியாகும்! விளைவுண்டு; காட்டு மேட்டில்
படிகளிலே ஆகிவிடும் நெல்வி ளைவே!
பலஉண்டு! வளமுண்டு! காடே அன்றோ? 19

சுனைஉண்டு; சுனையோரம் மீன்க ளுண்டு!
சுழல் உண்டு; சுவையான நீரும் உண்டு!
பனைஓலை உச்சியிலே ஆடல் உண்டு!
பழுத்தமட்டைத் தகரமென கத்தல் உண்டு!
நனைந்துள்ள இலை வளைந்து நீளல் உண்டு!
நல்நீற்று ஓட்டத்தில் சுள்ளி எல்லாம்
வினையினிலே பாழ்பட்ட மனிதர் போல
விளையாடி அசைந்துவிடும் அழகாய் நாளும்! 20

எங்கோர்தான் ஓர்யானை பிளிறல் செய்யும்!
　　எதுஒன்றோ குகைவிட்டுப் பாய்ந்தே ஓடும்!
அங்கே ஓர் மான்அலறி முள்ளில் தேங்கும்;
　　அதைப்பார்த்து நரியொன்று கூவல் செய்யும்!
திங்களதில் இழைவிட்டுத் தேடிப் பார்க்கும்!
　　தித்திக்கும் திராட்சையதைக் கிளிகள் கொத்தும்!
தங்கம்போல் தூரத்தே மலையும் தூங்கும்!
　　தளராத காடுஅது! தக்கோர் காடு! 21

மெத்தென்ற புற்கூட்டம்; மூளும் நல்ல
　　மெதுவான காட்டுத்தீ அனலின் மூட்டம்!
சித்தத்தை அடக்கிவிடும் சாதுக் கூட்டம்!
　　சிவலோக வழிபாடும் முனிவர் கூட்டம்!
முத்திநிலை பகர்கின்ற அறவோர் ஆங்கே
　　முறையாக ஆழ்ந்திருக்க சுனையும் உண்டு!
கத்தாத சிறுமுயல்கள் கரந்து ஓடிக்
　　கலைமானின் சுவடுகளைத் தேடிச் செல்லும்! 22

புற்றுண்டு; புற்றினிலே பாம்பும் உண்டு!
　　புதிதாகப் படமெடுத்து ஆட லுண்டு!
கற்றறிந்த ஆன்றோர்போல் புற்றுக் குள்ளே
　　கலையாமல் குவிந்தோடி அமைத லுண்டு!
குற்றங்கள் இல்லாத நல்ல பாம்பு!
　　குதித்தோடி நெடும்புற்றின் முனையில் நின்று
விற்பனையே இல்லாத நடனம் ஆடி
　　வியப்பதனைத் தோற்றுவிக்க முயலல் உண்டு! 23

காட்டுவெளி தனிலேதான் கீரி, பாம்பு
　　கடுத்தங்கே போரிடலும் உண்டு! உண்டு!
நாட்டினிலே வாழும்பல மன்னர் எல்லாம்
　　நலங்காண முனிவர்களை வணங்கு தற்குக்

காட்டினுள்ளே நுழைதலுண்டு; வருத லுண்டு!
கலகங்கள் பலவற்றை நீக்கல் உண்டு!
மேட்டினிலே முனிவர்களும் நிற்றல் உண்டு!
மேதினியைக் காப்பவரும் அவரே அன்றோ! 24

பாதைகளில் பலவாகக் கிளைத்து ஓடிப்
பழுதில்லா இனிமைமிகு செடிகள் உண்டு!
காதைத்துளைச் செய்கின்ற அருவி ஓசைக்
கண்முன்னால் கழிந்தோடும்; இழிந்தே ஓடும்!
போதைதரும் பழமங்கே வெடித்துத் தொங்கும்;
பலவாறு தேன்பிலிற்றி வழிந்து செல்லும்!
பாதையடி நடக்கையிலே எங்கும் தோன்றி
பலகாட்சி தெரிந்துவிடும்! பிரியும் பாதை! 25

வளர்கின்ற மரமுண்டு; வளைந்தே ஆடும்
வாகான கிளையுண்டு; கலைந்தே செல்லும்
தளர்நடையின் சிறுயானைக் கூட்ட முண்டு!
சரிந்துவிடும் பூங்கொடிகள் தாவல் உண்டு!
களர்நிலத்துக் காட்சியிலும் கனிவே உண்டு!
கல்நுனியில் கூட ஒரு விதையின் கூர்மை!
அளந்தறிய முடியாத அழகின் சேர்ப்பு!
ஆமந்த காடுதான் அருளின் வீடு! 26

## ஆசிரமம்

காட்டுக்கு உட்புறத்தில் வசிட்டர் வாழ்ந்தார்.
காட்சிக்கு அவர் இனிதாய் அமைந்து வாழ்ந்தார்.
நாட்டினிலே அவர்புகழும் பரவி என்றும்
நலமான அருள்சேவை ஆக்கி வந்தார்!
கூட்டங்கள் பலவருமே! மன்னர் கூடக்
கூட்டமுடன் படையுடனே வருதல் உண்டு;
நாட்டிற்கு அரியபல தொண்டும் ஆற்றி
அமர்ந்திருந்தார் அமைதியுடன் ஆங்கே நாளும்! 27

சின்னஞ்சிறு ஆசிரமம்! அதனைச் சுற்றிச்
சிலவாக பலவாக பசிய காட்சி!
என்புருகும் அன்பங்கே இருந்த தாலே
எதிலுமேதான் உருக்கமது இருந்த தங்கே!
இன்பவழி முக்திவழி தருத லாலே
இனித்ததுவே ஆசிரமம்! இம்மை வாழ்வின்
புன்மையினைப் புலப்படுத்த வாழ்ந்த தாலே
புதுமையுடன் வசிட்டரும்தான் ஓங்க லுற்றார்! 28

அடர்ந்த பெரும் காட்டிற்குள் அவரும் வாழ்ந்து
அடங்காத தவயோகம் ஆற்றி வந்தார்!
படர்ந்திடவே சீடர்களும் பாங்காய் என்றும்
பாவவழி துடைக்கின்ற வழிகள் கண்டார்!
நடந்துபல கார்டுச்சித்தர் வருகை தந்து
நாள்தோறும் உறவாடி மகிழ்ந்த தாலே
கடவுளென அவர்வாழ்ந்தார்! மதிக்கப் பட்டார்!
காட்சிக்கோ மிகஎளியர்! இனியர் கூட! 29

'சிவசிவ' என் றேகூட்டம் கூடும் அங்கே!
சிவநேசச் செல்வரெலாம் சூழ்வர் அங்கே!
பவமறுத்து அவமறுத்து வாழ்வ தற்குப்
பண்புபல வசிட்டர்தான் கூறி வந்தார்.
தவம்ஆற்றித் தக்காராய் இருந்த தாலே
தர்கத்தை அருட்தாக வாழ்வை அள்ளித்
துவள்கின்ற மனிதர்க்கு அளித்து வந்தார்!
துயரம்ஆ சிரமத்தில் ஒழிந்த தங்கே! 30

வரிசையிலே சீடரெலாம் நின்று நின்று
வகைவகையாய்ப் பலகற்று வாழ்வை நாடிப்
பரிசுபல கொணர்ந்தங்கு சேர்த்து நின்றார்!
பாசவலை அறுப்பதற்கு வழியும் கற்றார்!

திரிகின்ற காட்டுமனி தர்கள் எல்லாம்
திரியாகி விளக்கான வசிட்டர் தம்மைப்
புரிந்துகொள, புனிதமது பெற்றுக் கொள்ள
புகுந்தோடி ஆசிரமம் நுழைய வந்தார். 31

வசிட்டர் முனி! வானளந்த முனிவர்ஏறே!
வற்றாத நதியோரம், மலையின் ஓரம்,
பசித்திருந்து, தனித்திருந்து விழித்தி ருந்து,
பலகண்டு, பலதவங்கள் ஆற்றி ஆற்றி
நசித்துடலை நரம்புகளை வளைத்துக் கட்டி
நகநுனியில் நின்றாங்கே, நாசி கட்டி,
கசிந்துருகி சிவன்வேண்டி 'பிரம்மம்' பெற்றுக்
காசினியில் பிரம்மரிஷி ஆன சான்றோர்! 32

பலகோடி நியமங்கள் நியதி கண்டு
பல இடத்தில் பாங்காகப் பதுங்கி வாழ்ந்து
கலக்கத்தைக் கடத்தேகி காட்டுள் நீந்தி
கல் இடுக்கில் தவம் இருந்து, காதில் என்றும்
நலமற்ற சொற்கேளா நிலைமை பெற்று,
நாவடக்கி மௌனத்தில் ஆழ்ந்து ஆழ்ந்து
மலமடக்கி, மும்மலத்தை, வென்று வென்று
மூவுலகை வென்றுவிட்ட முனிவர் அன்றோ? 33

கலைகடந்து, கவலையெலாம் கடந்து நின்று,
காலத்தைக் கடந்தேகி காமம் வென்று,
மலைவெளியில் நெஞ்சத்தை மாண்பாய்க் காத்து
மண்மேலே அறவாழ்வின் நிழல்கள் கண்டு,
குலைவில்லா உறுதிக்குள் நினைவைக் கோத்துக்
கூடியொடு குவிப்பினிலே யோகம் செய்து
வலைவீசி இறைவனையே பிடித்துக் கொண்டு
வாழ்ந்தவர்தான்! 'பிரம்மரிஷி' வசிட்டர் அன்றோ? 34

காட்டுக்குள் சிறுவழிகள் பலவும் கண்டு
கண்ணிமைகள் மூடிவைத்துக், கசிவில் தேங்கி
வீட்டுக்கு வழிகண்டு, வழிகள் கூறி
விளங்கிவிடும் மாமுனிவர்: ஆன்ற நல்ல
நாட்டுக்கு அறிவுரைகள், அன்பின் ஆர்வம்
நலிவதனைப் போக்குதற்கு வழிகள் கூறிக்
காட்டுள்ளும் நாடதனைக் கொணர்ந்த யோகி!
காலத்தைக் கண்முனையில் வென்ற யோகி! 35

புலனடக்கி, புலனாசை முழுதும் வென்று,
புகழ்வெறுத்து புதுப்பெண்ணின் ஆசை தன்னை
நலங்கெடுக்கும் என்றெண்ணி ஒதுக்கி விட்டு,
நகர்மக்கள் வாழவழி செய்த சான்றோர்!
புலவர்களும், அரண்மனையின் கவிஞர் தாமும்
புவிஎல்லாம் போற்றிடவே வாழ்ந்த யோகி!
பலநாட்டு முனிவர்களும் பாதம் காணப்
பதைத்துவரும் அருள்யோகி! உயர்ந்த யோகி! 36

உள்ளத்து உணர்வடக்கி, உலகம் வென்று,
ஊமைஎன குரல்அடக்கி, உண்மை கண்டு
பள்ளத்து நீர்போல பாவச் சேற்றைப்
பக்திவெள்ள ஆற்றினிலே கரைய விட்டுத்
தெள்ளூற்ற வானவழி தெரிந்து ஆய்ந்து
தெளிவுக்குள் தெளிவதனை தெளிந்து தேர்ந்து
துள்ளுமந்த காமவழி தூர்த்து விட்டுத்
துவளாமல் வாழ்ந்தபெரு வசிட்டர் யோகி! 37

## சபலா

வசிட்டரிடம் ஒருபசுவும் இருந்த தங்கே!
வானத்துத் தேவதை அளித்த தாலே
பசிபோக்க, பொருள்அளிக்க, வளம ளிக்க
பலவாக அருள் அளிக்க, அன்ப ளிக்க

வசிக்கின்ற சூழலிலே வாழ்வளிக்க
வளர்கின்ற சமயத்தில் ஒளி அளிக்க,
புசிப்பதற்கு எல்லாமே மந்திரத்தால்
புதுமையுடன் தெளிவாக அளிக்கும் ஆதான்! 38

அழகான ஆஅதுதான்! அண்மை நின்று
அலங்கலது இல்லாமல் இனிமை தந்து
பழகுகிற பழக்கத்தில், சுழலும் சுற்றில்,
பாங்காக ஓடுவதில், படைப்பில் நின்று,
தழுதழுத்த குரலினிலே கத்தி கத்தித்
தளிர் ஓசை தனைஎழுப்பி, ஆர்ந்தெழுந்து
மழலையென உடன்ஒழுகும் பசுவே ஆகும்!
மகிழ்வான ஆவதனுள், தெய்வம் உண்டு! 39

ஆசிரமத்து தனிலேதான் ஆவும் தங்கி
அலைகின்ற பலருக்கும் பால்அளித்துப்
பாசிமிகு நீனைவதனைத் துடைத்துக் காத்துப்,
பழவகைகள் பலஉண்டு; அனைத்தும் அங்கே
ஆசிரம அழகினிலே ஆழ்ந்து ஆழ்ந்து
அமைதிக்கு வழிவகுக்கும் பசுவே ஆகும்!
நாசிநுனி கண்டென்றும் தவத்தில் பெற்ற
நாநிலமே போற்றுகிற பசுவே ஆகும்! 40

வால்நுனியை மேல்தூக்கிச் சுழற்றிச் சுற்றி
வளைவான முதுகினிலே தடவி நின்று,
பால்அளித்து, அனைவர்க்கும் இனிமை தந்து,
பரவியுள காடதனில் பசும்புல் மேய்ந்து
ஆல்விதைகள் சிந்தியுள மரத்தின் கீழே
அமர்ந்திருந்து, அசைபோட்டு, தின்று தின்று,
வேல்முனையாய்க் கொம்புகளைப் பெற்றுக் கொண்டு
விளையாடும் சபலர்தான்! விந்தை ஆவே! 41

காலையிலே எழுந்திருந்து வசிட்டர் தானும்,
கலைந்திருக்கும் சடைமுடியைச் சற்றே நீவி,
சாலையிலே பசுவோடு நடந்து செல்வார்.
சலசலக்கும் சதங்கையது! ஓசை ஆர்க்கும்!
காலைமலை யோரத்தில் சாரல் தன்னில்
கலைதலுமே இல்லாமல் புல்லை மேய்த்துச்
சாலைவழி வந்திடுவார்! சபலா தானும்
சத்தமுடன் குதித்துவரும்! தாவிச் செல்லும், 42

ஆசிரமம் ஆஅதனால் நிறைவு காணும்!
அதுநீங்கிச் சென்றுவிட்டால் குறைவே உண்டு!
பாசிநிறைக் குளக்கரையில் நீர்அ ருந்த
பாங்காகச் செல்லுமது! அப்போ தெல்லாம்,
நாசியினைப் பார்த்திருக்கும் வசிட்டர் அங்கே
நலங்காண பசுஎங்கோ ஓடிற் றென்று
ஆசியினை வழங்கிவிட ஓடிப் போவார்!
ஆஅதற்கு மகிழ்ச்சிவரும்! தேடல் அன்றோ? 43

மன்னர்பலர் வந்திடுவார்; அரசி யர்கள்
மாமுனிவர் தமைக்காண வருகை தந்து
இன்னமுதம் அளித்திடுவார்; முனிவர் தாமும்
இங்கிதமாய்ப் பசுவதனை அழைத்து வந்து
'என்னருமை சபலாவே! அளிப்பாய் இந்த
இனிமைமிகுவிருந்தினர்க்கு' என்றே கூறி
தன்னிறைவாய்ப் பழமளிப்பார்! அமுதம் தந்து
தளராது விருந்தளிப்பார்! ஆஅ ளிக்கும்! 44

சீடரெலாம் அதைப்போற்றி வளர்த்த லுண்டு;
சிந்தையிலே பெருமகிழ்வில் ஆழ்ந்து நின்று,
வாடலினை அதற்கங்கே போக்கிப் போக்கி
வளர்ப்பதுண்டு! வாழ்வதனை அளிப்ப துண்டு!

காட்டதனில் மிகதூரம் சென்று மேய்ந்தால்,
கலகங்கள் அமைக்கின்ற மிருகம் வந்து
கோட்டதனில் துன்பங்கள் விளைப்ப துண்டு!
கொன்றிடுவர் சீடரெலாம் மிருகம் தன்னை! 45

விடியலிலே விழித்துவிடும் சபலா! ஆங்கே
விருந்துவரும்; மருந்துக்கு மறுவி ருந்தை
குடிசைவழி தனில் அளித்துக் காக்கும்: நாளும்
குழந்தையென விருந்திற்கு ஆர்வம் காட்டும்!
அடிமையென உழைத்திருக்கும்; ஆனால் அந்த
ஆவினையே பிடித்துச்செல யாரும் வந்தால்
கடினமுடன் போராடும்! முனிவர் இல்லம்
கடக்காது நீங்காது! நிலைத்து வாழும்! 46

## விசுவாமித்திரர் வருகை

வெகுநாட்கள் ஆனதினால் வசிட்டர் தம்மை
வணங்கிவர மன்னரவர் கிளம்ப லுற்றார்.
தகுதிமிகு பிரம்மரிஷி அன்றோ? மன்னர்
தளராது பலபரிசு எடுத்துச் சென்றார்!
மகுடங்கள் ஒளிவீச, மடிப்பில் உள்ள
மரகதங்கள் ஒளிவீச, வைரம் பாய,
மகுடிக்கு அடங்கிவிடும் பாம்பு போல
மக்களெலாம் பின்தொடர மன்னர் சென்றார். 47

தேர்ஏறி, திகழ்ந்திருந்த கொடுஞ்சி மீதில்
தித்திக்கும் புன்னகையை, அரசி தன்னை,
பாவேந்தர் பார்த்திருக்க, பாதை தன்னில்,
பலநூறு மக்களெலாம் கூடிக் கூடி
'தார்வேந்தே! எம்அரசி! வாழ்க! வாழ்க!
தரணியிதை வென்றென்றும் வாழ்க' என்று
ஆர்வமுடன் முழக்கமிட்டு, நகர்ந்து செல்ல
அத்தேரும் ஊர்ந்ததுவே! சென்ற தங்கே! 48

கோட்டைவெளிகதவங்கே திறந்த போது,
கா்வல்படை முன்பின்னால் குதிரை ஏறி
நா்ட்டுவழி நடந்ததங்கே; நடந்த போது,
நடையோரம் காத்திருந்தா் எளிய மக்கள்!
பா்ட்டுண்டு; இசைக்கருவி முழக்க முண்டு!
பாதையிலே பலகூட்டம் குழும லுண்டு!
காட்டுக்குப் போனாலும் மன்ன ரன்றோ?
கா்வற்படை மிகத்தேவை! சென்றார் அங்கே! 49

எண்கோணத் தேர்அதுதான்! உச்சி மீது
எடுப்பாகக் கொடியறந்து ஆடிற் றங்கே!
தண்மையுடன் மலர்பொழிவாய்த் தேரின் உள்ளே
தளிர்மைமிகு மா்லைகளும் தொங்கிற் றங்கே!
பண்போடு தேர்ஓரம் நின்று கொண்டு,
பாகனவன் குதிரைகளை ஓட்டிச் சென்றான்!
கண்பார்த்துத் தெருஓர மனிதா் எல்லாம்
திகைப்போடு மகிழ்வுற்றார்! பவனி அன்றோ? 50

கோலங்கள் பலபோட்டார்; கும்பிட் டங்கே
குழுமிஎழில் கற்பூரம் கொளுத்தி வைத்தா்!
காலங்கள் வென்றிடவே சுத்தம் செய்து
காலையிலே வீதியினைக் கழுவி வைத்தா்!
பாலங்கள் தோறுமொரு கொடியும் நட்டுப்
பாதையெலா்ம் வரவேற்பு ஆக்கி வைத்தா்!
சா்லங்கள் வித்தைகள் பலவும் செய்து,
சனக்கூட்டம் தேங்கியது! அரசர் அன்றோ? 51

காட்டெல்லை வந்தவுடன் சோலை யுள்ளே
கலைவெள்ளம் பாய்ந்திடவே, இனிமை துள்ளி
நாட்டெல்லை முடிவினிலே நலம ளிக்க
நங்கையவள் புன்சிரிப்பா்ய் அமர்ந்தி ருந்தாள்!

காட்டுகிற இயற்கையெழில் புதுமை தன்னைக்
கண்ணிமைத்து, அசைத்தங்கே காட்டிச் சென்றார்!
மேட்டினிலே தேரேறி நகர்ந்த போது,
மேனியெலாம் புளகித்தாள் அரசி அங்கே! 52

"மங்கைநீ பார்த்திடுவாய்! மகிழ்வில் ஆழ்ந்து
மடிப்பினிலே, நிலமடிப்பு வயிற்றுக் குள்ளே
அங்கங்கே நீண்டபெரு மரங்கள் எல்லாம்
அடையாளம் தெரியாமல் வளர்த லுண்டு!
திங்கள்கதிர் நுழையாது! வெயிலும் கூட
திகைத்துவிடும்; மலைத்துவிடும்! காட்டின் ஓரம்!
இங்கோடும் கொடிபாராய்! இளமை யோடு
இதழ்விரிக்கும் கிளிபாராய்! குயில்பா ராய்நீ!" 53

"கிளைவளையும்; வளைவினிலே பாம்பு தொங்கும்;
கிரீச்சென்று இளங்குருவி கத்தல் செய்யும்!
வளைகளிலே சிறுஓசை உண்டே! கேட்பாய்!
வளைந்தோடும் சிறுசுனையும் அலையும் பாராய்!
தளைவிட்ட சிறுமுயல்கள் சுற்றிச் சுற்றி
தாவிவிடும்; தண்மைமிகு காட்டுப் பூனை
களைந்துவிட்டு அச்சத்தைக் காட்டில் ஓடும்!
கலைந்துவிடும் சிறுசிறுத்தை அதனைக் கண்டு!" 54

"யானைகளின் நடையுண்டு; பிளிறல் உண்டு!
எங்கோர்தான் சிங்கமது கத்தும் கேளாய்!
தேனைபெரு காட்டினுள்ளே திரிந்தால் காணத்
தித்திக்கும்! மலர்பந்தல் மூடும்! மூடும்!
தானையது செல்வதுமே கடின மாகும்!
தளையாகி செடி கொடிகள் தொல்லை காணும்!
மானைநிகர் மங்கை! நீ மகிழ்வாய்க் காண்பாய்!
மாண்புமிக்க முனிவரது காடு அன்றோ?" 55

மங்கையவள் அதுகேட்டாள்! மலர்ச்சி ரிப்பில்
மனம் தோய்ந்தாள்! கன்னமெலாம் சிவப்பில் ஆழ
தங்கிவிடும் நாணமது விழியில் தேங்க
தளிர் உடலில் நெளிவதுவும் கவிந்து ஓங்க
அங்கங்கே ஆழுகிற இயற்கை ஆட்டம்
அத்தனையும் கண்ணோட்டிப் பார்த்தாள்! பார்த்து
தங்காத சிலிர்ப்பினிலே ஆழ்ந்தே போனாள்!
தன்னிதழைத் திறந்தவளும் பேச லுற்றாள்! 56

"பேரரசே! இக்காடு நல்ல காடே!
பெரும்பொழுதும் இங்கேநாம் கழிப்போம் அன்றோ?
ஆரவாரக் கூச்சலிலே தங்கித் தங்கி
அவசத்தைப் பெறும்போது நெஞ்சமெல்லாம்
காரணமே சிறிதுமின்றிக் கவலை கொள்ளும்!
காடிதுதான் அதுபோக்கும்! சுனையே அன்றோ?
தாரதுவும் கழுத்தினிலே புனையும் போது,
தண்மைவரும்; இன்பம்வரும்! இனிய வாழ்வே" 57

"மயில்ஆடும், தோகையதைக் குயிலும் கண்டு
மயங்கிவிடும்; இன்குரலில் பாடும்! பாடும்!
குயிலோசை கேட்டங்கே மந்திக் கூட்டம்
கும்மாளம் போட்டுவிடும் கிளையின் ஓரம்!
பயிலாத நடனமதை மயிலும் ஆடும்!
பார்த்துவிடும் முயல்கூட்டம்; பறந்து ஓடும்!
துயில்கின்ற புலியதுவும் தூக்கம் நீங்கும்!
துன்பத்தை மறந்துவிட பாட்டைக் கேட்கும்!" 58

"சுனையோரம் மீன்ஆடும்; அந்த மீனைச்
சுருட்டிவிட கொக்கொன்று குவிந்திருக்கும்!
கனைகுரலில் பலவிதமாய்க் கூவி கூவி
கலைவிரிப்பைத் தானெழுப்பும் மானின் கூட்டம்!

நனைந்துவிடும் காந்தள்மலர் காற்றின் ஓரம்!
நகைத்துவிடும் முல்லைமலர் கொடியின் ஓரம்!
பனைமரத்துக் காய்ந்துவிட்ட மட்டை கூட
படபடத்து இசைபாடும்! இசையின் காடே!" 59

"அங்கங்கே திரிந்துவிடும் மிருகம் எல்லாம்
அப்படியே போரின்றிக் கூடல் செய்யும்!
தங்குமிடம் தனிலேதான் குவிந்தி ருந்து
தலைவணங்கி உலவலதை செய்தல் உண்டு!
பங்கமிலாத் தவமுனிவர் தவத்தின் முன்னால்
பழுதில்லா காடிதுதான் இனித்தல் உண்டு!
தங்கிவிடும் அருள்வாழ்வு! அதிலே கூடத்
தாவிவரும் தூய்மைமிகு அருளின் ஆண்மை" 60

"இனிமைக்குப் புதுவடிவம் தருதல் போல,
இயங்கும்எழில் தனிஉருவம் பெறுதல் போல,
தனிமையிலே தவழ்கின்ற அழகே உண்டு!
தங்கிவிழும் பெருங்கலையின் ஆர்ப்பே உண்டு!
புனிதமிகு அருள்வாழ்வு ஒளியும் காட்ட
பொழுதெல்லாம் தவவாழ்வு மிளிரச் செய்ய
கனிவான தவக்குரலும் தழைத்தே ஓங்க,
காடிதுவும் மிகஅழகே! இனிமை! இன்பம்!" 61

என்றங்கே மங்கையவள் பேசிச் சென்றாள்!
எடுத்தவளின் இன்கரத்தைப் பற்றி பற்றித்
தன்கரத்துள் அணைக்கையிலே அரசி தானும்
தவழ்ந்திட்டாள்! புன்னகையில் தளிர்மை யோடு!
அன்பொழுக, அலைவில்லா விழியி னோரம்
ஆர்வமது புளகிடவே, பொங்கல் செய்ய
கன்னல்மொழி அதுகேட்டார் விசுவா அங்கே!
தலைந்ததுவே அவர்துயரம்! காட்டின் ஓரம்! 62

"வசிட்டரது ஆசிரமம் தெரியும் போலும்"
　　வளைகுலுங்க மங்கையவள் கேட்டு வைத்தாள்.
"கசிகிறதா நெஞ்சமது அவரைக் காண?"
　　காசினியின் மாமன்னர் சிரித்துக் கேட்டார்.
"கசியாதா? வசிட்டமுனி அன்றோ?" என்றாள்!
　　"கண்களிலே ஆசிமொழி உண்டே" என்றார்!
"நசிந்துவிடும் பாபமெலாம்" என்றாள் மங்கை.
　　"நாநிலமே போற்றிவிடும்" என்றார் மன்னர்! 63

"என்ன அது? அழகுமிகு பசுவோ?" என்று
　　எழுந்திருந்து மங்கையவள் தூரம் காட்டி
நின்றிருந்த சபலாவைக் காட்டிக் கேட்டாள்!
　　நிறைவோடு மாமன்னர் அதனைக் கண்டார்.
"தன்னுடைய வாலையது ஆட்டி ஆட்டி
　　தரைகுனிந்து மேயுமது! அழகைக் காண்பாய்!
இன்பமுடன் மிரள்விழியில் பார்க்கும்! பார்க்கும்!
　　இதுவசிட்டர் பசுவாக இருக்கக் கூடும்" 64

என்றவரும் உரைகூறி அதனைக் கண்டார்!
　　எழில்கண்டு மங்கையவள் மகிழ்ந்தே போனாள்!
அன்றங்கே வெயில்வீழ, இனிமை வாழ
　　அலங்கிவரும் சுனைநீரும் தேரின் ஓரம்
குன்றதனைக் கிழித்தோட, மங்கை பார்த்தாள்.
　　குறையில்லாக் குளிர்மையது பாய்ந்த தங்கே!
தென்றலது வீசிற்று! திகழ்ந்த அந்த
　　திருக்காட்சி சபலாவும் துள்ளிற் றங்கே! 65

புல்மேய்ந்த சபலாவைப் பார்த்துப் பார்த்துப்
　　புதுமோகம் கொண்டதனால் மங்கை மெள்ள
"நல்ஆவும் அதுவன்றோ? ஆடும் ஆட்டம்
　　நன்றாகப் பார்த்திடுவோம்! நிற்போம் இங்கே,

எல்லோரும் ஓய்வதுவும் பெறலாம் சற்றே''
எனச்சொன்னாள்! மாமன்னர் இசைவும் தந்தார்.
எல்லாரும் ஒருகூட்ட மாகி நின்று
எழிற்காட்சி சபலாவை நோக்க லுற்றார். 66

மங்கையவள் இறங்கிவந்து சுனையின் ஓரம்
மடிந்தோடும் நீர்நிலையைப் பார்த்த வண்ணம்,
திங்கள்முகம் சிரிப்புதிர்க்க நின்று பார்த்தாள்
திகழ்ந்துவிடும் அவளழகை மன்னர் பார்த்தார்.
தங்கியொரு மலரெடுத்துக் கரத்தில் பற்றி
தளிரடியின் ஒன்றதனை வேரில் வைத்து
அங்கொருபேர் தெய்வீகச் சிலையைப் போல
ஆமவளும் நின்றிட்டாள்! அழகின் பாவை! 67

சுனையோரம் நீரோட, சுவையாய் எங்கும்
சுற்றிலுமே பழம்வெடித்துத் தேன்பி லிற்ற
அனைவருமே ஓர்(ஓ)ரம் ஒதுங்கி நிற்க,
அலைபாயும் சேலைநுனி தன்னைப் பற்றி,
தினைஅரிசி கதிர்தூரம் வயலில் பொங்க,
திகழ்கின்ற இயல்போடு அவளும் பார்த்தாள்!
நனைந்திடவே பாதத்தின் விரல்மு னைகள்
நகைப்போடு சபலாவைப் பார்த்து நின்றாள்! 68

தேர்மீது கால்ஊன்றி மன்னர் கூடத்
திரள்கின்ற கூட்டத்தைக் கண்ட போது,
ஆர்வமுடன் இறங்கியங்கே வந்து சேர்ந்தார்.
அவர் ஆசைவில் வீரமது துள்ளிற் றங்கே!
பார்போற்றும் மன்னரவர்! நடையில் நேர்ந்த
படைபலத்தை வல்லமையை மங்கை பார்த்தாள்!
கார்கால மேகம்போல் விரைந்து வேகம்
கால்காட்ட நடந்திட்டார்! மன்னர் அங்கே! 69

தோள் உண்டு; துவளாத தோள்கள் அன்றோ?
தூரத்தே அத்தோள்கள் நடந்த போது
ஆள்படைகள் அத்தனையும் அசைவில் ஆழ்ந்து
அப்படியே விழிதிறந்து பார்த்த தங்கே!
தூள்தூளாய்க் கோட்டைகளைச் சாய்க்கும் தோள்கள்!
தூய்மையினைக் காக்கின்ற வலிமைத் தோள்கள்!
வாள்சுழற்றி வாதாடும் களத்தின் தோள்கள்!
வாகையினைச் சூடுமது! மங்கை பார்த்தாள்! 70

சிறுகூட்டம் சபலரீவை நோக்கி ஓடிச்
சரிந்தங்கே கலைந்ததனால் தனிமைச் சூழல்
சுறுசுறுப்பாய் வந்ததங்கே! அதனைப் பார்த்துச்
சுழல்கின்ற விழியோரம் மன்னர் கண்டார்!
அறுவடையில் காட்டுவயல் மனிதர் எல்லாம்
அங்கங்கே ஆழ்ந்திருக்க நிறைவும் பெற்றார்!
மறுபடியும் மங்கையவள் பார்த்த போது,
மன்னர்தான் அவளருகே நிற்கக் கண்டாள்! 71

"சுனையோரம் மலர்பெற்றாய்" என்றார் வேந்தர்.
"சுவையான மணமலர்தான்" என்றாள் மங்கை.
"சுனை அலையில் மலர்நீந்தல் உண்டோ?" என்றார்!
சூள்கொட்டி மங்கையவள் திரும்பி நின்று.
"பனைகாற்றின் வேகம்தான் வீசும் கண்டீர்!
பலமலர்கள் அடித்தோடும் நீரில்" என்றாள்!
"எனைப்பிடிக்க நல்திட்டம் போட்டாய்" என்றார்!
"ஏன்அதுவும்? என்னுள்ளே உள்ளீர்" என்றாள்! 72

"உள்ளத்தில் என்றால் நீ" என்று கேட்டார்.
"உயரமிலா உணர்வதுதான்" என்றாள் மங்கை.
"அள்ளிவிட முடியாதே" என்றார் மன்னர்.
"ஆசைதான்! வெட்கம்தான்" என்று மங்கை

தள்ளிவிட்டு அவர்கரத்தைத் தூரம் ஓடித்
 தளிர்பாதம் நீரதனில் தோய்ந்திருக்க
அள்ளியள்ளி நீர்எடுத்து உதறல் செய்தாள்;
 அதுபாய்ந்து அவர்முகத்தில் பாய்ந்த தங்கே! 73

"நீர்எடுத்துச் சாரலைத்தான் அடிக்கின் றாய்நீ"
 நின்றங்கே மாமன்னர் சிரித்து விட்டார்.
"தார் நனைந்தால் மணக்குமது; மணமும் வந்தால்
 தலைசுழலும்; மயக்கமது தோன்றும் தோன்றும்
ஆர்வமுடன் நெஞ்சமெலாம் காதம் தன்னில்
 ஆழ்ந்துவிடும்! இன்பமது" என்றாள் மங்கை!'!
தேர்குதிரை அப்போது கத்திற் றங்கே;
 திரைபோல சிறுகொடிகள் அல்லிற் றங்கே! 74

நீரதனில் அலைவடிய, நீண்ட சேலை
 நிறைவாக அதில் அலைய, முகத்தின் ஓரம்
வீரமிலா மென்மைமிகு துளிகள் ஆழ்ந்து
 வியப்பாகச் சிலிர்த்துவிட, விழியின் ஓரம்
ஆரவாரம் பொங்கிவிட, அசைவில் துள்ளல்
 அமைதியினில் பெயர்ந்துவிட, மங்கை நல்லாள்,
தாரதனைக் கரம்பற்றி இழுத்து நின்றாள்!
 தார்வேந்தர் தள்ளாடி நீரில் நின்றார்! 75

"1 இழுக்கின்றாய்" எனக்கூறி நின்றார்" என்ன
 இழுப்பினிலே சுகமுண்டே" என்றாள் மங்கை.
"கழுத்துவலி தெரிந்திடுமோ?" என்றார் மன்னர்!
 "கரம் வளைந்தால் இன்பம்வரும்" என்றாள் மங்கை;
"தழுதழுத்த மென்கரமோ" என்றார் மன்னர்.
 "தாகத்தில் தவிக்கின்ற காமம் கூட!
தழுவிவிடும்! வளைத்துவிடும்! இனிய எண்ணம்
 தந்துவிடும்! பெண்கரமே" என்றாள் மங்கை! 76

தா. செ. துரகுபதி

## காமம்

"பெண்கரம்தான் இன்பத்தை அளிக்கும் என்றாய்;
பெருங்காமம் நெஞ்சத்தில் தோன்று மன்றோ?
அண்மையிலே பெண்ணிருந்தால் காமம் தோன்றி
அலைக்கழிக்கும்; இழுத்தாட்டும்; அறியா யோநீ?
எண்ணமெலாம் காமத்தில் வீழ்ந்து போகும்!
எழுகின்ற காமத்தைப் பற்றி நான்தான்
திண்மையுடன் கூறிடுவேன்; கேட்பாய் நீயே! 77
திகைப்பாக அது நெஞ்சை ஆட்டு விக்கும்;"

"வளைக்கரத்தைக் காட்டியேநீ என்னை இங்கே
வளைப்பதற்கு முயலுகிறாய்; நன்றே நன்றே;
களையான உன்முகத்தைக் காணும் போது
கலங்கிவிடும் என்நெஞ்சம்! உண்மை; உண்மை;
தளையாகும் காமத்தை வெல்ல வேண்டும்;
தள்ளாடும் காமத்தை நீக்க வேண்டும்!
விளைகின்ற காமத்தால் பயன்தான் இல்லை!
விளக்குகிறேன் அதனைத்தான்" என்றார்
சொன்னார்— 78

"காமம் (எ)னில் என்னஅது? உணர்ச்சி அன்றோ?
கண்ணிதனால் உடலதனைக் காணும் போது,
காமமது எழும்பிவரும்; கட்டல் ஆமோ?
கனவினிலும் அதுதோன்றும்; உண்மை அன்றோ?
காமத்தில் வீழ்ந்துருண்டால் மானம் போகும்;
கண்ணதுவும் குருடாகும்; அறிந்து கொள்வாய்!
காமத்தால் உலகமிது இருண்டு போகும். 79
கண்ணீர்தான் விடையாக முன்னால் தோன்றும்

"இனிக்கின்ற பண்டம்போல் காமம் தோன்றும்.
இங்கிதமும் அதில்தோன்றும்; இசையும் சேர்ந்தால்
தனியான இன்பம்வரும்; தவிக்கும் நெஞ்சம்;
தளராத வயதினிலும் இதுவே தோறுன்ம்

பனிக்காலப் போதினிலே மெள்ள தோன்றி
படிப்படியாய் வளருமது; பண்பே போகும்!
கனியாகி அழுகலிலே வருமே; என்றும்

கண்ணீர்தான் ஆறாகப் பெருகி யோடும்'' 80
உள்ளமொரு ஓடுகின்ற அழுக்கின் ஆறே!
உறங்கும் பல காமங்கள் கலக மெல்லாம்
அள்ளஅள்ளக் குறையாமல் அழுக்கின் வாடை
அதில்பொங்கும்: அணையின்றி ஓடிப் போகும்!
கள்ளங்கள் கயமைகள் கசடின் தன்மை
கண்ணிமைக்கும் நேரத்தில் நெஞ்சில் தோன்றும்
கொள்ளைகள் கொலைகார கவன மெல்லாம்

குவிந்தெழும்பும் அதைவெல்ல யாரால் ஆகும்? 81
வேடிக்கை விளையாட்டு அங்கே தோன்றும்;
வேசித்தனம் வெறும்புகைச்சல் அங்கே தோன்றும்
கோடிபகைக் குற்றங்கள் குவிந்து தோன்றும்.
கொழுப்போடு காசாசைத் தோன்றும்; தோன்றும்
நாடியொரு நப்பாசை நலிந்து தோன்றும்.
நாள்தோறும் பெண்ணாசை மிகையாய்த் தோன்றும்;
தேடிவரும் மயக்கங்கள்; திளைத்துத் தோன்றும்
தீவினைகள் தோன்றிவிடும்; தடுப்பார் யாரோ? 82

கள்குடித்துக் கிறக்கத்தில் ஆழ்வார் போல
கண்ணிமைக்கும் நேரத்தில் நெஞ்ச மங்கே
வெள்கிவிடும்; வீழ்ந்துவிடும்; பாத ளத்தில்!
வெந்துவிடும்; கொடுங்காம நெருப்பில் நின்று;
வெள்ளத்தில் உருளுகிற பொருளே போல
வெகுண்டோடி பாதையிலே மனந்தான் செல்லும்;
தள்ளாடும் வயதினிலும் தவறா தங்கே
தங்கிவிடும் காமம்தான்; தவிர்ப்பார் யாரோ? 83

முள்ளொன்று காலினிலே குத்தல் போல
முழுதாக நெஞ்சத்தில் முள்தான் குத்தும்
எள்ளெடுத்துச் செக்கினிலே ஆட்டும் போது
எண்ணெய்தான் சுரந்தெழுந்து வருதல்போல
கொள்ளெடுத்து அடுப்பினிலே வைக்கும்போது
கொதிக்கின்ற நிலையதனை அடைதல் போல்
தெள்ளியதோர் நிலையின்றி நெஞ்ச மங்கே
திகைத்துவிடும் நெஞ்சமெலாம் வேகும்; வேகும்! 84

கால்வாயில் அழுக்குத்தான் சேர்தல் போல
கடைக்கண்ணில் பீமாதான் கூடல் போல
பால்வைத்தால் பதஞ்சிதறித் திரிதல் போல
பண்ணொன்று தாளத்தில் சிதைதல் போல
சூல்கொண்டால் தவறுதல்போல். வாடல் போல
சொர்குசான சட்டையிலே கறையைப் போல
ஆல்போல விழுதுவிட்டு ஆசைக் காமம்
ஆம்நெஞ்சில் தோன்றிவரும்; வெல்வார் யாரோ? 85

என்றேதான் விசுவும் கூற[1]
எழிலாகச் சிரித்தாள் மங்கை;
"என்னமோ காமம் பற்றி
எதனையோ கூறுகின்றீர்.
அன்பெனும் ஊற்று இந்த
அழகான காமத் தால்தான்
என்றுமே தோன்றும்: நீரும்
ஏற்றிதை உணர வேண்டும்" 86

" 'அனிச்சமே அவளின் தோற்றம்'[2]
அழகாக வள்ளு வர்தான்
இனிப்புடன் இதனைச் சொல்லி
இருக்கின்றார் கண்டீ ரோநீர்?

---

1. விசு—விசுவாமித்திரர்.
2 வள்ளுவர் : திருக்குறள் : 112 : 1

தனியாகக் காமத் துப்பால்
　　தன்னிகர் அற்றே இங்கே
இனிமையாய் ஆக்கி யுள்ளார்.
　　இதற்கென்ன பதில்நீர் சொல்வீர்?" 87

என்றேதான் மங்கை கேட்டாள்
　　எழிலாக விசுந கைத்து
"என்னிடம் நீயு மிங்கே
　　ஏதேதோ சாலம் காட்டி
அன்பினில் பிணைத்து விட்டாய்.
　　ஆனாலும் சொல்வேன் கேளாய்"
என்றிதைப் புகன்று விட்டு
　　எண்ணத்தில் காமம் சொன்னார் 88

"வள்ளுவரும் காமத்தை புகன்றார் என்றே
　　வழிவந்து எனைநீயும் மடக்கப் பார்ப்பாய்
கள்ளத்தால் வருகின்ற காமம் தன்னைக்
　　கணப்போதும் அவர்கூற வில்லை; இங்கே
வெள்ளம்போல் தோன்றிவரும் காமத் தைத்தான்
　　வெடுக்கென்று எறிந்திடுதல் வேண்டும் என்றேன்.
பள்ளத்தில் நீரோடும் போன்று வந்த
　　பதைக்கின்ற காமத்தால் பயனே இல்லை." 89

கொடுங்காட்டில் கண்டயிடம் எல்லாம் தோன்றிக்
　　கால்நீட்டிப் பாய்கின்ற புலியே போல
நடுநிற்கும் நிலையின்றி முரட்டுப் பண்பில்
　　நாநிலத்தில் நெஞ்சம்தான் பாயும், பாயும்!
அடுக்கடுக்காய் அலைபாயும் வெறும்எண் ணத்தில்
　　அக்காமம் குளிர்காயும்; முடங்கிப் போகும்;
திடுக்கிட்டு நலிகின்ற நினைவில் தோன்றி
　　திளைத்துவிடும்; தீங்கில்விழும்; காப்பார் யாரோ? 90

"கண்காணும், செவிகேட்கும், மூக்கு நாளும்
கவனமுடன் முகர்ந்துவிடும்; நாக்கு இங்கே
கண்டவுடன் சுவைத்துவிடும்; தோலும் மெள்ள
கரந்தங்குத் தொட்டுதொட்டு இன்பங் காணும்
கண்சிமிட்டும் நேரத்தில் ஐந்தும் சேர்ந்து
கவிழ்த்துவிடும் நெஞ்சத்தைச் சேற்றில் என்றும்
எண்ணத்தைக் கெடுத்துவிடும் இணைந்து நின்று
எழுச்சிகளும் வெல்லாது ஏற்பார் யாரோ'' 91

என்றுவிசு கூறும் போது
எண்ணத்தில் தெளிவு பெற்று
''என்னுடை கருத்தொன் றுண்டு
எடுத்ததை இயம்ப இங்கே
அன்பான சம்மதம்தான்
ஆமிங்கே வேண்டும், வேண்டும்
என்றுமச் செந்நா போதார்''[1]
எடுத்தாண்ட கருத்தே ஆகும்.'' 92

''காமத்தின் கடலே உண்டு;
கலமில்லைக் கடந்து செல்ல'[2]
ஆமது உண்மை வார்த்தை
அதைமீற யாரும் உண்டோ?
காமத்தை அளந்து வைத்தார்
கவனமாய்க் குறளில் என்றும்,
சேமமாய் வாழவேண்டில்
சிந்தனை மிகவும் வேண்டும்'' 93

---

1. திருவள்ளுவர்.
2. ,, : திருக்குறள் : 117 : 4

"காமத்தை வெள்ள மென்று
கணிசமாய்க் கூறி விட்டார்.[3]
தேமலும் உடலில் பாயும்;
திகைப்பேதான் தோன்றும் இங்கே,
ஆமதை வெல்லல் ஆமோ
அடிமையாய் ஆதல் உண்டு,
காமமும் கொல்லும் நோயே,
கருத்தினில் கொள்ள வேண்டும்" 94

"மறைக்கவே முடியா திங்கே
மதியினில் தோன்றும் காமம்;
அறையவும் முடியா திங்கே
அதனைத்தான் காத லர்க்கு[4]
கறைபட்ட வாழ்வும் அந்தக்
காமத்தால் வந்து சேரும்;
நிறையவே கூறு கின்றீர்;
நிம்மதி யாகக் கூறீர்" 95

மங்கையவள் இவ்வாறு கூறும் போது
மனமொன்றி அதைக் கேட்டார் விசுவும் அங்கே.
திங்கள்முக அவளைத்தான் கூர்ந்து பார்த்தார்.
"தெகிட்டாத இன்பத்தின் ஊற்றே" என்று
மங்களமாய் அவரழைத்தார் 'செந்நா போதார்
மதியோடு கூறியதைக் கூற ஏற்றாய்.
இங்கிதமாய் நானும்தான் சொல்வேன் கேளேன்"
இதழ்குவித்துப் புன்முறுவல் செய்தே சொன்னார்.
96

3. " : " : 117 : 7
4. " : " : 177 : 2

"வெண்ணையினை நெருப்பினிலே வைக்கும் போது
வெந்துருகி நெய்யாகி நிற்றல் போல
எண்ணங்கள் எல்லாமே காமம் முன்னால்
எரிந்துவிடும்; உருகிவிடும்; பாழாய்ப் போகும்.
திண்மையுடன் நின்றாலும் பயனே இன்றித்
தீர்ந்துவிடும்; மனித மனம், திரிந்து போகும்
வெண்பட்டில் கறைபடிதல் போல, இங்கே
விரைவாக நெஞ்சம்தான் அழுக்கில் பாயும்" 97

கருநாகப் பாம்பின் தோலை
இங்கிதமாய் உரித்தெடுத்துப் போடல் போல
வறண்டுள்ள எண்ணத்தை உரித்தெடுத்து
வாய்க்காலில் நாள்தோறும் எறிதல் வேண்டும்.
துறவர்டை மலத்தினிலே கிடந்த போதும்
"தூய்மையதை இழக்காத தன்மை போல
திறமான இறையன்பில் மூழ்க வேண்டும்,
தெளிவான கடவுளடி தொழவே வேண்டும்" 98

"கூர்க்கல்லே காலினிலே தட்டுப் பட்டால்
கோவென்று கண்ணங்கே அழுதல் போல
கார்முகிலில் பேரோசை கேட்கும் போது
கலங்கிமனம் செவியங்கே மூடல் போல
நேர்வழியில் நடக்கையிலே அழுக்கைக் கண்டு
நெஞ்சுநொந்து மூக்குமுனை மூடல் போல
சீர்மையிலா உணவுதனைக் கண்ட போது
'சிடுக்கென்று நாக்குநுனி சுருளல் போல" 99

"தூய்மையிலா ஆடையினைக் கண்ட போது
துளக்கென்று தோலங்கே சுருங்கல் போல
பாய்ந்தோடும்; பதுங்கிவரும்; துள்ளல் செய்யும்;
பாழ்மனந்தான் அதன்போக்கு என்னே! என்னே!

காய்ந்துவிட்ட மரம்போல வறண்டு போகும்.
கலங்கிவிட்ட குட்டைபோல் கலக்கம் கொள்ளும்
தேய்ந்துவிட்ட சக்கரத்தின் பல்லே போல
தீர்ந்துவிடும்; பயனதனால் என்னே? என்னே?" 100

மழைச்சாரல் தனில்நனைந்து அழிந்து போன
மங்கல்மிகு ஓவியம்போல் நெஞ்சம் போகும்,
இழையறுந்து சிதறிவிட்ட ஆடை போல
இம்மனந்தான் சிதறிவிடும்; சிதைந்து போகும்;
கழைக்கூத்தா டியொருநாள் கழியின் மேலே
காலூன்றித் தடுமாறி நடத்தல் போல
விழைவோடு விருப்போடு காம மோடு
வேக்காட்டில் தடுமாறி மனமும் செல்லும் 101

வீணையிலே மெல்லிசையை எழுப்பும் போது
'விரு'ட்டென்று இழையறுந்து இசையும் அங்கே
ஆணையின்றி அழிந்தொழிந்து அலறல் போல
அடிமனந்தான் அழகிழக்கும்; வீழ்ந்து போகும்
சாணையிலே வைக்காத கத்தி போல
சக்தியின்றி மனிதமனம் மழுங்கல் செய்யும்;
ஆணைக்கு அதனைத்தான் பணிய வைக்க
ஆமிங்கே இறைவன்பால் திருப்பவேண்டும் 102

பாலையிலே மணற்பரப்பிய சூறைக் காற்றில்
பாடாகப் படுகின்ற மலரைப் போல
சோலையிலே நீரின்றிச் செடிகள் எல்லாம்
சோர்வாகத் தலைதாழ்த்தி வாடல் போல
காலையிலே கண்சுருங்கி நோயில் வாடும்
கடைநிலையின் கலக்கத்தில் ஆழ்தல் போல
வேலையிலாப் பாழ்மனந்தான் வதங்கிப் போகும்.
வெற்றியதைக் கொள்வார்கள் உலகில் யாரோ? 103

மண்ணடியில் சுரங்கத்தைத் தோண்டித் தோண்டி
மணிக்கணக்காய்த் தங்கத்தை எடுப்ப தற்கு
எண்ணத்தில் உறுதியுடன் உழைக்கும் போது
எழுகின்ற வெடியோசை போல, நெஞ்சில்
கண்மயங்கி, கதிகலங்கி, திண்மை யற்ற
கரிநினைவு எனும்வெடிப்பு தோன்றி நிற்கும்
புண்ணியங்கள் பலஇங்கே செய்தல் வேண்டும்
புழுவாழ்க்கைத் தள்ளாடும்; மீள்வோர் யாரோ? 104

ஓர்(எ)லும்பை வீதியிலே வீசும் போது
ஒன்பதுநாய் ஓடோடிக் கவ்வல் போல
சீர்(இ)ல்லா இடுகாட்டில் நரிகள் எல்லாம்
சீறிவந்து பிணத்தினையே தின்னல் போல
கூர் (அ)றிவே சிறிதின்றி மனிதர் நெஞ்சம்
[1]குவலயத்தில் வெறும் (எ)லும்பிற் கலைத லுண்டு!
ஊர்பற்றி எரிகையிலே பீடிக்காக
உளநெருப்பை கொள்ளல்போல் மனமும் வேகும் 105

"நல்லபல கருத்தை நீர்தான்
நன்றாகக் கூறியுள்ளீர்.
எல்லையே இல்லா ஞானம்
என்றுமே உமக்கே உண்டு;
சொல்லிலே ஆழ்பொ ருள்தான்
சொகுசாக அமைந்த தின்று
நில்லாத உலக மீதே;
நிம்மதி காண வேண்டும்." 106

என்றேதான் மங்கை சொல்லி
எழில்முகம் சிவக்கப் பார்த்தாள்;
அன்றங்கே காமம் கண்ணில்
அழகாகத் தோற்றம் காண

---

1. உலகத்தில்

நன்றாகக் கரத்தை நீட்டி
நல்லவர் விசுவைத் தொட்டாள்.
அன்பாக அவரைப் பார்த்தாள்
அவர் துணுக் குற்றார் ஆங்கே 107

"என்னஇது? என்னஇது? மங்கை! நீயே
என்கரத்தைத் தொடுகின்றாய்; ஏது சொல்வேன்.
அன்புக்குப் பொதுஇடமா? வேண்டாம்; இங்கே
அனைவருமே பார்க்கின்றார்; நிறுத்து; வேண்டாம்;
இன்பத்தை அரண்மனையில் காண்போம்; இந்த
இருள்காட்டில் காமமதை வெல்வாய் நீயே;
என்றைக்கும் காமம்தான் பொல்லா த்தீங்கே
எண்ணத்தில் கொள்வாய்நீ" என்றே சொன்னார் 108

"வள்ளுவர் கூறி யுள்ள
வளமான கருத்தை யெல்லாம்,
தள்ளியே விட்டீர் நீவிர்
தவிக்கின்றேன் நானும்; அந்தத்
துள்ளிடும் கருத்தை நீரும்
துவளாமல் கேட்பீர் ஐயா!
வெள்ளமாய்க் கருத்தைச் சொன்னார்!
விம்மிடும் காமம் சொன்னார். 109

"நீர்சுரந்(து) ஒழுகும் போது
நிறையவே இதழின் ஓரம்
ஆர்வமாய்க் காமம் தோன்றும்
அதுவேதான் இன்பக் கேணி-[1]
நேர்ந்திதை நாவ லா[2]தான்
தித்திக்கக் கூறி யுள்ளார்
நேர்த்தியாய் அதனைக் கேட்டு
நெஞ்சிலே கொள்வீர் ஐயா!" 110

1. திருவள்ளுவர் திருக்குறள் : 113 : 1
2. திருவள்ளுவர்.

உரையவள் செய்த போது
உணர்ச்சியாய் விசுவும் பார்த்தார்.
"கரையிலாக் காமத் தாலே
கண்ணினில் அவரும் உள்ளீர்;
நுரைதள்ளும் அன்பில் தோய்ந்து
நுண்ணிய மையும் தேறார்;
கரைகாணா அன்பில் தோய்ந்து
கண்ணிலே அவரும் நேர்வார்"[1] 111

"தலைவியே கூறு கின்றாள்;
தகைமைசால் உரையும் அன்றோ!
அலைகின்ற நெஞ்சக் குள்ளே
அவர்வாழ்வார்; சூடாய் உள்ள
நிலையினில் நீரும் உண்களும்,
நொந்திடும் அவரு டல்தான்[2]
கலைபயில் தலைவி சொல்வாள்,
காமத்தை வெறுத்தல் ஆமோ?" 112

"மெல்லவே தலைவி தன்னை
மெதுவாக நீங்கி விட்டால்
எல்லையே இல்லாக் காமம்
என்றைக்கும் சுடுமே என்னை;
அல்லலைக் குறைக்க எண்ணி
அவளினை நெருங்கி விட்டால்
தொல்லைதான் வருமே; காமத்
தீயினைப் பெற்றாள் அன்றோ"[3] 113

1. திருவள்ளுவர்; திருக்குறள் : 113 : 7
2. " " : 113 : 8.
3. " " : 111 : 4

"இத்தகைக் குறட்பா வில்தான்
இதயத்தைத் தொட்டு விட்டார்
மெத்தெனும் குறளைப் பாடும்
மேதாவி வள்ளு வர்தான்!
எத்தனைச் சொன்னால் கூட
ஏற்றிட மறுக்கு மிந்த
சத்தான நெஞ்சம்; என்ன
சரித்திரம் படைக்கின் றீரோ?" 114

"புரியாத காமத்தைத் தான்
புரிந்திட வைத்தார் அன்றோ
சரியாக நீரோ ஏன்தான்
'சாக்கடைக் காமம்' என்றீர்!
அரிதான கருத்தை ஏனோ
அன்புடன் ஏற்ப தில்லை!
துரிதமாய் ஏற்றுக் கொள்வீர்!
தூய்மையே காமம் அன்றோ!" 115

"வள்ளுவரின் கருத்தைநான் எதிர்க்க வில்லை.
வளமான கருத்திதுவே; ஆனால் கூட
கள்ளுமாகி வாழ்வினிலே காமம் தீதே!
கணப்போதில் பிறர்மனையை நோக்க வைக்கும்;
எள்முனையின் நேரத்தில் தடுமாற் றத்தை
ஏற்படுத்தும்; குழியினிலே தள்ளிப் போடும்;
அள்ள அள்ளக் குறையாது அந்தக் காமம்.
அதுதீது! சொல்வேன்நான்; கேட்பாய் நீயே!" 116

விண்ணதிலே பறக்கின்ற பட்டம் ஒன்று
விசையோடு மேல்கீழே சுற்றல் போல
கண்ணெதிரே இழிமனந்தான், சுழலும்; சுற்றும்!
கழுவாளம் அதற்கிங்கே ஏது முண்டோ?

புண்தோன்றி உடலிதனை வாட்டும் போது
புவியிதனில் மருந்ததற்குப் பூசல் போல
எண்ணமெலாம் இறையன்பில் இழைய வேண்டும்.
எல்லாமே ஒன்றின்மேல் ஒன்ற வேண்டும். 117

பேய்க்காற்றில் மரக்கிளையின் இலைகள் எல்லாம்
பெயர்ந்தெழுந்து அலைந்தோடிப் பறத்தல் போல
தேய்ந்துவிட்ட பழங்கயிற்றில் தொங்குகின்ற
தேறாத மட்குடத்தின் தன்மை போல
காய்ந்துவிட்ட நிலத்தினிலே பயிர்கள் எல்லாம்
கருதினம் வளமின்றிக் கழிதல் போல
வாய்மையிலாப் படுகுழியில் மனந்தான் வீழ்ந்து
வகையற்றும் பதைபதைக்கும் உடையும்; வாடும்! 118

வீட்டினிலே கூரையிலே அழகா(ய்) உள்ள
வியப்பான கொடுமைமிகு சிலந்தி ஒன்று
தீட்டுகிற அழகான கூட்டிற் குள்ளே
திறமற்ற ஈசென்று சிக்கிக் கொள்ளும்
நீட்டியேதன் கூர்காலால் அதனைப் பற்றி
நிம்மதியா யச்சிலந்தி உண்ணும்; உண்ணும்!
கூட்டிற்கு வெளியினிலே பறப்ப தற்குக்
குறுஈயால் முடியாது; தவிக்கும்சாகும்! 119

உலகமொரு அழகான சிலந்திக் கூடு!
உயிர்களெலாம் அதில்மாளும் ஈக்கள் கூட்டம்!
நலமற்ற கொடுமனத்தால் எண்ணி எண்ணி
நாள்தோறும் சிலந்திக்கு ஈயாய் ஆவர்!
வெலவெலத்து அச்சத்தால் வாடி வாடி,
வெந்திடுவர்; வேதனையில் வீழ்வர்; வாழ்வர்;
பலகற்றும் பயனில்லை; "அறிவில் நல்ல,
பகுத்தறியும் பாங்கில்லை; என்னே வாழ்க்கை?" 120

"கடற் பரப்பின் ஆழத்தில் தங்கி யுள்ள
கலக்கத்தை அளிக்கின்ற சுறாமீன் இன்னும்
திடமான திமிங்கலங்கள் எல்லாம் சேர்ந்து
திகழ்கின்ற கப்பலினைக் கவிழ்த்தல் போல
நடக்கின்ற வாழ்விதனில் நாளும் நாளும்
நலமற்ற தீய எண்ணம் பொங்கிப் பொங்கிச்
'சடக்'கென்று வாழ்விதனைச் சாய்க்கும்; சாய்க்கும்;
சக்தியது உளதோ இந் நெஞ்சைக் கட்ட?" 121

"விண்ணிடித்து மழைபெய்து ஓயும் போது
விடியாத பெருவெள்ளம் பொங்கிப் பொங்கி
மண்ணிதிலே மலைக்காது ஓடி ஓடி
மலையதனைக் குடைந்தெடுக்கும் தன்மை போல
எண்ணத்தில் பெருங்காமம் எழும்பி நின்று
ஏற்றத்தை அளிக்காமல் சிறுமை தந்து
பண்பின்றி வாழ்கின்ற நிலைய ளிக்கும்!
பதைக்கின்ற காமத்தைக் கட்டல் ஆமோ?" 122

இதனையே விசுவா கூற
இதமாகக் கேட்டாள் மங்கை;
அதனையே ஏற்கா தந்த
அழகான குறளைக் காட்டி
மதியானை போல அன்றி
மான்போலப் பேச லுற்றாள்;
மிதமாக நகைத்து விட்டு
மின்வெட்டாய்ப் பேசலானாள். 123

"தன்பார்வை தன்னால் அந்த
தலைவன்பார்க் காத போது
மின்னலாய்ப் பார்ப்பாள்; அங்கே
மின்னிடும் தலைவன் பார்த்தால்

தன்னோக்கைச் செலுத்தி எங்கோ
நவிப்பது போலப் பார்ப்பாள்”[1]
என்னே ஒரு காமம் என்றாள்
எழிலான விழியாள் மங்கை! 124

“‘ஒரு கண்ணைச் சற்றே சாய்த்து
ஒருகணணால் தலைவ னையே
‘திரு’வாக எண்ணிப் பார்ப்பாள்
திகைப்பான தலைவன் ஆங்கே!
கருநீலக் கண்ணின் பார்வை
காமத்தை ஊட்டு மன்றோ?
நருக்கென்று புன்சி ரிப்பில்
நகைப்பாளே தலைவி ஆங்கே’[2]” 125

‘கண்ணிரண்டும் ஒன்றா யாகி
கலந்திடும் போதே அங்கே
எண்ணங்கள் இணையு மன்றோ
எதற்கந்த வாய்ப்பேச் சுக்கள்?’”[3]
எண்ணியே வள்ளு வர்தான்
எழிலாகச் சொல்லி விட்டார்.
திண்ணிய ஓர்க ருத்து
தீயதா! எண்ணிப் பாரீர்” 126

என்றங்கே மங்கை நல்லாள
ஏதேதோ பேச லுற்றாள்;
அன்பாக விசுவா தானும்
அவளையே பார்க்க லானார்.

---

1. திருவள்ளுவர் : திருக்குறள் : 110 : 4
2. ” ” : 110 : 5
3. திருக்குறள் : திருவள்ளுவர் : 110 : 10

இன்பத்தின் ஊற்றும் மெல்ல
இதமாகப் பொங்கிற் றங்கே!
கன்னத்தில் அவர்பார் வைதான்
கணப்போதில் நெளிந்தோ டிற்று! 127

" 'அண்ணலும் நோக்கி நின்றாள்;
அவளுந்தான் நோக்க லுற்றாள்;
கண்ணுக்குள் இரண்டு பேரும்
கணப்போதில் மாறிப் புக்கார்!'[1]
தண்ணிலக் காம மன்றோ?
தடுத்திடல் யாரால் ஆகும்?
கண்ணிலும் காமம் உண்டே
'கட்'டெனச் சொன்னாள் மங்கை." 128

"வள்ளுவரும் கம்பருந்தான் சொன்னார் என்று
வகையாகக் காமத்தை விலக்கு கின்றாய்.
தள்ளாடும் போதினிலும் காமம் உண்டு.
தட்டுதற்கு யாராலே முடியு மிங்கே.
கள்ளதனக் காமத்தை எதிர்த்தல் வேண்டும்!
கள்ளுண்ட மயக்கம்போல் காமம் வேண்டாம்.
அள்ள அள்ளக் குறையாது காமப் பேய்தான்
அதற்கும் (ஒ) ரு கடிவாளம் வேண்டும் மிங்கே." 129

"விண்ணிடித்து மழைபெய்து ஓயும் போது
விடியாத பெருவெள்ளம் பொங்கிப் பொங்கி
மண்ணிலே மலைக்காது ஓடி ஓடி
மலையதனைக் குடைந்தெடுக்கும் தன்மை போல
எண்ணத்தில் பெருங்காமம் எழும்பி நின்று
ஏற்றத்தை அளிக்காமல் சிறுமை தந்து
பண்பின்றி வாழ்கின்ற நிலைய ளிக்கும்.
பழகாத இம்மனத்தைக் கட்டல் ஆமோ!" 130

1. கம்ப இராமாயணம். மிதிலைக் காட்சி படலம் : 590

வானகத்தில் எழிலான மின்னல் தோன்றி
வளர்ந்திருக்கும் மாமதனைத் தாக்கித் தாக்கிக்
கானகத்தின் எழில் நிலையைக் கசடாய் ஆக்கி
கவிழ்ந்திடுதல் உண்டுண்டு; அதனைப் போல
மானத்தை மாண்பதனை மங்கச் செய்து
மகிழ்ச்சியினை மதியதனை மழுங்கச் செய்து
மோனத்தை, மௌனத்தை வெட்டல் செய்யும்.
மென்மைமிகு நீமனந்தான்! கடப்பார் யாரோ? 131

கடும்வெயிலில் பனிக்கட்டி உருகல் போல
கடைமனத்தான் காமத்தில் உருகிப் போகும்;
நடுநிற்றல் அதற்கிங்கே இல்லை, இல்லை!
நமைச்சலுக்கு மருந்துண்டா? எண்ணிப் பார்ப்பாய்!
வடுதோன்றி வாழ்க்கையதைச் சிதைத்த போதும்
வலிமையெலாம் உடலினிலே குறைந்த போதும்
தடுக்கியொரு காமத்தில் மனந்தான் வீழும்;
தடுப்பவர்கள் உலகத்தில் யாரும் உண்டோ? 132

நன்றாகப் பழுத்துள்ள பழத்திற் குள்ளே
நலமில்லாப் புழுவொன்று நெளிதல் போல
தின்னுகிற சுவையான உணவுக் குள்ளே
தீங்கான கல்மண்தான் திகழ்தல் போல
மன்பதையில் எழிலான உடலுக் குள்ளே
மனமென்னும் பொருளுந்தான் உண்டே; உண்மை
குன்றாது அதற்குள்ளே காமப் பேய்தான்
குறைப்பவர்கள் யாரேனும் உண்டோ?
உண்டோ? 133

மெல்லியதோர் பஞ்சதனை எடுத்துச் சென்று
மெருகிட்டு எரிநெருப்பின் அருகில் வைத்தால்
துல்லியமாய்க் கணநேரம் கழிதல் முன்னே
துயரளித்துச் செந்தீதான் பற்றல் போல

நல்லதொரு உடலுக்குள் காமம் என்றும்
நகை செய்யும் நாநிலத்தில் வெற்றி கொள்ள
நல்நெஞ்சம் உள்ளவர்கள் யாரும் உண்டோ?
நச்சுமனம் வென்றவர்கள் உண்டோ? உண்டோ? 134

அலைகடலில் வாழ்கின்ற மீனை மெள்ள
அனல் பரப்பும் மணற்பரப்பில் போட்டு விட்டால்
நிலைகுலைந்து தடுமாறி மூச்சு முட்டி
நிம்மதியை இழந்துவிட்டுத் துடித்தல் போல
அலைஅலையாய் எழுகின்ற காமந் தன்னில்
அனுதினமும் துடிக்கின்றார் மாந்தர் இங்கோ
குலைந்தழிந்து உடற்கட்டும் அதனால் என்றும்
குமைகின்றார் மனம்வாடி; குறைப்பார் யாரோ?"
135

பலபேசி அவள்கரத்தைப் பற்றிக் கொண்டு
பசுமைமிகு சோலைக்குள் நுழைந்து சென்றார்;
கலகலப்பாய் அவள் சிரித்தாள், அவரும் சேர்ந்து
கண்ணதுவும் மின்னிவர சிரித்துச் சென்றார்.
நலமாக இருவருமே 'சர்ச்சை' செய்து
நம்பகமாய் மெதுவாக நடந்து சென்றார்.
சிலமான்கள் ஓடினவே மருட்சி யோடு
சிரிப்புடனே இருவரும்தான் நடந்தார் அங்கே. 136

அப்போது மங்கை நல்லாள்
அழகான குறளின் போக்கை
தப்பாது காட்ட எண்ணித்
தளிர்நடை போட்டாள்; அந்தச்
சிப்பியில் முத்தும் போல
சிந்திக்கும் வள்ளு வர்தான்
தப்பிதம் இன்றிச் சிந்தை
தன்னிலே வந்து நின்றார். 137

"கள்ளினை உண்டால் தானே
கருதுவோர் இன்பம் தோன்றும்.
உள்ளிடும் போதே காமம்
உயர்ந்தோர் இன்பம் சொல்லும்'[1]
வள்ளுவர் இக்கூற் றைத்தான்
வளமாகக் கூறி யுள்ளார்.
தள்ளினும் போகா திங்கே
தரமுள்ள காமம் ஐயா! 138

'மேகமே விண்ணில் தோன்றி
மழையினை அளித்தல் போல
ஆகத்தில் அன்பர் வந்து
அன்பினை அளிப்பர் அன்றோ'[2]
மோகத்தில் இன்ப முண்டு;
முறையாகப் பயில வேண்டும்.
சோகமே வந்து சேரும்;
சுகமதில் வாரா திங்கே 139

என்றேதான் குறள்கருத்தைக் கூற லுற்றாள்.
எண்ணத்தில் விசுவாதான் ஏற்றார்; ஏற்று
"சொன்னதிலே உண்மைதான் உண்டு; ஆனால்
சொல்வதிலே இல்வாழ்வின் நோக்க முண்டே,
பொன்னான கருத்ததுவே; வாழ்வின் நோக்கம்;
பொசுங்கிவிடும் வாழ்வதுதான் மிகுகா மத்தால்!
என்றைக்கும் காமத்தை வெல்ல வேண்டும்"
எனச்சொன்னார் விசுவாவும்; தொடர்ந்தார் அங்கே. 140

1. திருவள்ளுவர் : திருக்குறள் : 121 : 1
2. " " : 120 : 2

குளக்கரையில் அமர்ந்திருந்து வலையை வீசிக்
குளமதனைக் கலக்கிவிடும் போதில், அங்கே
துளக்கிவரும் நீரினிலே மீனும் வந்து
துவண்டுவிழும்; துள்ளிவிழும்; அதனைப் போல
பளபளக்கும் காமத்தின் வலையில் மாந்தர்
படுக்கின்றார்; தவிக்கின்றார்; புரள்கின் றார்கள்!
வளமில்லா வாழ்வினிலே வதிகின் றார்கள்
வம்பளக்கும் மனத்திற்குப் பூட்டுமுண்டோ? 141

சக்கரங்கள் மண்மீது சுழலல் போல
சக்தியுடன் காமந்தான் சுழன்று செல்லும்;
சொக்கிவிழும் நினைவுகளும்; வளமே இல்லாச்
சோர்வுமிகு எண்ணம் வரும்; தோன்றி நிற்கும்.
சுக்கானும் இல்லாத நாவாய்ப் போல
சுழற்காற்றின் காமத்தால் மனந்தான் வேகும்;
கொக்கரித்துப் பலவழியில் அதுவே செல்லும்
கொள்கின்ற மனிதர்கள் உலகில் உண்டோ? 142

எரிகின்ற விளக்கினிலே வீட்டில் பூச்சி
ஏதொன்றும் தெரியாமல் வீழ்ந்து நாளும்
அரிக்கின்ற சூடதனில் சிக்கி விக்கி,
அழுதழுது சிறக்கின்ற காட்சி போல
புரியாமல், தெரியாமல் மாந்தர், இங்கே
பொழுதெல்லாம் காமத்தில் கழிக்கின் றார்கள்,
சரிகின்ற வாழ்வதனை அடைகின் றார்கள்,
சல்லடையில் நீர்போல வீழ்கின் றார்கள். 143

துளிநெருப்பு வீழ்ந்துவிட்டால் குவிந்தே யுள்ள
தூரத்து வைக்கோற்போர் நெருப்புப் பற்றி
வெளிகடந்து வானத்தை நோக்கி நின்று
வேகமுடன் தீ நாக்கைப் பரப்பல் போல

களிப்பினிலே மூழ்கதுளி காமம் கொண்டால்
கடந்துவிடும் எல்லையது தீயாய்ப் பொங்கி!
தளிர்த்துவிடும் விரைவாக நெஞ்சில் தோய்ந்து
தப்பினவர் அதன்பிடியில் உண்டோ? உண்டோ! 144

"கரித்துண்டால் வெண்சுவரில் தீட்டும் போது
கண்பார்க்கும் வேளையிலே சுவரில் எங்கும்
வரிவரியாய்க் கரிதேய்ந்து அழகை யெல்லாம்
வகையற்று அங்கங்கே தேய்த்தல் போல,
சரியான வழியின்றி வளர்த லாலே
சகத்தினிலே இவ்வாழ்க்கை அசையும்; ஆடும்
கரிக்கோடாய் இவ்வாழ்க்கை மாறிப் போகும்
கவனமுடன் வென்றவர்கள் உலகில் யாரோ?" 145

"மண்வெடித்துப் பூகம்பம் எழும்பும் போது
மலையெல்லாம் சாய்ந்தங்கே வீழ்ந்து, எங்கும்
தன்மையினை இழந்துபெரு ஓசை செய்து
தரணியைத்தான் கதிகலங்க வைத்தல் போல
கண்மூடி இருந்தாலும் காமம் நெஞ்சில்
கலக்கத்தைப் பூகம்ப நினைவைத் தோற்றித்
திண்டாட வைத்துவிடும்; தவிக்கச் செய்யும்
தீர்ப்பதற்கு இல்லையில; தீர்த்தார் யாரோ!" 146

"மெல்லியதாய் ஒளிவீசி எரியு மந்த
மென்விளக்கில் திரிகாய்ந்து தேய்ந்து போனால்
வல்லிருளில் வீடெல்லாம் ஆழ்ந்து நின்று
வருந்துகிற நிலையடையும்; அதனைப் போல
நில்லாது ஒளிநெஞ்சில் அணைந்து போனால்
நீக்கமற காமயிருள் சூழ்ந்து கொள்ளும்!
பல்காலும் பெருந்துன்பம் அளிக்கச் செய்யும்;
பாழ்மனதை வென்றவரும் உலகில் உண்டோ?" 147

"கல்லெடுத்து வீசுகின்ற போதில், அங்கே
கலையழகாய் காட்சிதந்து விளங்கு கின்ற
நல்லதொரு ஆடியொன்று நொறுங்கி வீழ்ந்து
நன்மையின்றிக் காலினிலே குத்தல் போல
அல்லல்பல அளிக்கின்ற காமக் கல்தான்
அழகான நெஞ்சமெனும் ஆடி தன்னை
வல்லமையாய்த் தாக்கிவிடும்; மணமும் வீழும்!
வாழ்விதனில் அதைவெல்லக் கருவி யுண்டோ?" 148

"அன்னம்போல் நடையழகைக் கண்டும்? பொங்கும்
அழகான ரோசாவின் கன்னங் கண்டும்
மென்மொழியின் இனிமையினைக் கண்டும், நல்ல
மெருகான மேனியினைக் கண்டும், கண்டும்
இன்பத்தை அளிக்கின்ற விழியைக் கண்டும்,
இதழ்ச்சுவையின் மோகத்தில் தனிமை கண்டும்,
என்றென்றும் மாதர்பிடி சுகத்தைக் கண்டும்,
ஏங்குகிற மனிதர்க்கு உய்வும் உண்டோ!" 149

"இப்படியே கூறி விட்டு
இருந்தார்நல் விசுவா தானும்.
எப்படித்தான் கூறி னாரோ?
எவ்வழியில் சிந்தித்தாரோ?
தப்பிதமும் உண்டோ?" என்று
தவழ்கின்ற கூந்தல் தன்னை
அப்படித்தான் தள்ளி விட்டு
அம்மங்கை கூற லானாள். 150

"தேன்வார்த்துக் குடிக்கும் போது
தெவிட்டாத இன்பம் தோன்றும்,
வான்நிகர் காமம் தன்னை
வளநெஞ்சில் நினைக்கும் போதே

தான்வந்த இன்பம் ஈயும் [1]
     தவிக்கின்ற நெஞ்சம் இங்கே
ஏ(ன்) என்று கேட்டு முன்னம்
     எழிலாக இன்பம் காணும்." 151

' தழுவிடும் போது காற்றும்
     தம்மிடை நுழையா வண்ணம்
எழுகின்ற காமத் தாலே
     இருவரும் தழுவி நிற்பர்
அழுக்கிலா காம மன்றோ?' [2]
     அதனைநீர் எதிர்க்கின் றீர்கள்!
பழுதிலா வாழ்வும் தப்பா?
     பழகிடும் காமம் தப்பா?' ' 152

' ' நாணமெனும் தாழ்ப்பா ளோடு
     நிறையெனும் கதவை அந்த
கோணல்மிகு காமம் தோன்றி
     கோடாரி போல வெட்டும்' [3]
வீணதாய்க் காமம் இங்கே
     விளக்கத்தான் படவே இல்லை,
ஆணவம் சிறிதும் இல்லை;
     அழகான வார்த்தை அன்றோ?" 153

வள்ளுவர் வகுத்த காமம்
     வழுவற்ற வாழ்வின் போக்கே.
கள்ளமே இல்லை இங்கே
     கருத்தினில் தூய்மை உண்டு.

---

1 திருக்குறள் : திருவள்ளுவர் : 109 : 10
2 " " : 111 : 8
3 " " : 126 : 1

அள்ளிடும் காம வாழ்வு
    அழகாக இருக்கு மன்றோ?
தள்ளிட வேண்டு மென்று
    தவறாமல் கூறல் ஆமோ?" 154

"வள்ளுவரை நானிங்கே எதிர்க்கவில்லை;
    வளமான வாழ்வதற்குக் காமம் வேண்டும்;
துள்ளிவரும் வேல்போல இளமை வேண்டும்;
    துவளாத காமமதும் வேண்டும், வேண்டும்;
தள்ளிவிட்டால் நல்வாழ்வைக் காமம் என்றும்
    தள்ளாடும் நல்வாழ்வு உண்மை அன்றோ?
புள்ளிவைத்த கோலம் போல் சிக்கல் தோன்றும்,
    புதுவாழ்வா மலருமங்கு! இல்லை; இல்லை!" 155

"காட்டாறு போலப்பெருங் காமம் வந்தால்
    கட்டறுத்து கரை சிதைத்து ஓடு மன்றோ?
நாட்டத்தில் நல்லொழுக்கம் வேண்டு மென்று
    நன்றாக வள்ளுவர்தான் சொல்லி வைத்தார்.
கூட்டத்தில் பிதற்றுகிற சொற்கள் அல்ல!
    கூடியொரு சிந்தனையில் வந்த சொற்கள்.
ஆட்டங்கள் காமத்தால் ஆடல் வேண்டாம்
    ஆகாது! உடலிங்கே வீழ்ந்து போகும்" 156

என்றெல்லாம் விசுவாவும் சொல்லி விட்டு
    எழிலான அவள்கரத்தைப் பற்றிக் கொண்டு
'என்னாலே உனைவெல்ல ஆமோ? நீதான்
    எடுத்தோதி வள்ளுவரை, மடக்கி என்னை
பின்னாலே தள்ளிவிட்டாய்! நன்று! நன்று!
    பிழையென்றால் மன்னிக்க வேண்டு மம்மா!
என்னத்தான் காமத்தை வெறுத்தால்கூட
    என்னுள்ளே அது எழும்பும்: உண்மை;
                உண்மை; 157

எனக்கூறி விசுவாவும் அவள்க ரத்தை
எடுத்தொன்றாய் விரல்கோர்த்து நடக்க லானார்
புனல்கண்டார்; அங்கேதான் சிறிது நேரம்
புளகிதமாய் இருந்தார்கள்; அதன்பின் னாலே
நனவுலகில் வந்தார்கள்; நடக்க லானார்;
நல்லவையே பலவற்றைப் பேச லானார்;
மனதினிலே மகிழ்ச்சியும்தான் ஒடிற் றங்கே
மங்கையவள் நகைத்திட்டாள்; அவர்ந கைத்தார் 158

சபலாவைப் பார்த்தல்

தனிமையிலே அவர்கள்தான் சிறிது நேரம்
தளிர்நடையில் மகிழ்ந்தார்கள்! சபலா தன்னைத்
தனித்திருந்து மங்கையவள் உற்றுப் பார்த்தாள்
தள்ளாடி அதுபறக்கும் தன்மை கண்டு,
கனிகொய்து இதழில்சுவை பெற்றுக் கொண்டே,
கரம்நீட்டி அதைக்காட்டி அவளும் நின்றாள்!
தனிமைக்குச் சாரமுண்டு! மன்னர் கூட
தன்விழியை நேர்செலுத்திப் பார்த்து நின்றார்! 159

"அந்தச்சிறு பசுவதனை நீங்கள் பார்ப்பீர்.
அதைக் கண்டால் அருள்பெருகும்; அறம்த ழைக்கும்
எந்த ஒரு உயர்வதும் அதனால் தோன்றி
எழுச்சிபெறும் எனக்கூறி மகிழ்வர் மக்கள்!
சித்தித்துப் பார்ப்பீர்! நான் அதனைக் கேட்க
சிந்தனையில் முடிவெடுத்தேன்! வசிட்டர் கூட
தந்திடுவார் என எண்ணி நிற்கின் றேன்நான்;
தாங்களதை என்சார்பாய்க் கேட்டு நிற்பீர்" 160

மங்கையவள் தன்கருத்தைக் கூறும் போது,
மாமன்னர் வெகுண்டெழுந்தார்! கோபம் உற்றார்!
"மங்கை நீ! என்கேட்டாய்? நன்றோ சொல்வாய்?
மாமுனிவர் வசிட்டரவர்! கேட்டல் நன்றாய்

தங்காது! களைப்பு வராது! நரை நெருங்கும்!
தரணியதில் அறமில்லை! தகைமை இல்லை"
அங்கு வருமங்கைக்குக் கூற லுற்றார்!
அவர்மன்னர்! அறமறிந்த ஆட்சியாளர்! 161

"அரண்மனையில் பசுவந்தால் எவ்வளவு நன்று!
அதைப்பிடித்துக் குளிப்பாட்டி, பால்கறந்து
திரளாக நெய் எடுத்து வாழ்தல் உண்டு!
திகழ்ந்துவிடும் அரண்மனையும் மகிழ்வில் அன்றோ?"
அரசியவள் குழைவோடு கேட்டு நின்றாள்!
அதுகேட்டு அவர் நகைத்தார்! மெள்ள நின்று
கரம்தொட்டுப் பேசியவர் மென்மை செய்தார்!
கலையாவிசுவாமித்ரர் அன்றோ மன்னர்? 162

"தெய்வீகப் பசுவந்தால் நாட்டில் என்றும்
திரண்டுவிடும் திசைதாளா! வசிட்டர் அன்றோ?
எய்துவிக்க அவருந்தான் பலவும் செய்வர்!
என்றாலும் முயன்றிடுவேன்; அவரின் அந்த
ஒய்யார நற்பசுவைக் கேட்டு வாங்கி
ஓடுமதன் வேகத்தால் நாட்டு நன்மை
எய்துவிடச் செய்கின்றேன்!" என்று கூறி
எடுத்தங்கே நீர் அள்ளி வீசிவிட்டார்! 163

நீர்சிதறித் துள்ளிற்று! இதழின் ஓரம்
நிறைந்திடவே, அவள்முகத்தில் இன்பம் பொங்கி
தேர்ந்துவிட, சேர்ந்துவிட, கலையில் மூழ்கி
தித்திக்கச் சிரிப்புதிர்த்தாள்! சிந்தை அள்ளி
பார்த்திருந்தார் மாமன்னர்! பாதை யோரம்
பலபேரும் வந்தங்கே கூட லுற்றார்!
ஆர்வமுடன் தேர்நோக்கி மன்னர் மெள்ள
அசைந்தங்கே நடந்திடவே மங்கை சேர்ந்தாள்! 164

தூரத்தில் ஆசிரமம் தெரிந்த தாலே
தூய்மையுடன் அவரிருவர் அமர்ந்து சென்றார்!
தூரத்து ஆசிரம வாழ்வில் மூழ்கி
துவளாமல் வாழ்கின்ற வசிட்டர் தம்மை
ஆரவார ஓசையோடு பார்த்துச் சென்ற
அரசரவர், விழிநிமிர்த்திக் கண்டபோது,
தேரதனை உராய்ந்துடனே சபலா தானும்
திகைப்போடு ஓடிற்று! வேகம்! வேகம்! 165

வழியினிலே சபலாவை பார்த்து நின்ற
வளமான படைவீரர் பதைத்து நின்றார்.
குழியாக்கி மண்ணதிலே பிளவும் செய்து,
குதித்தாடி ஓடிடவே, முகத்தைச் சாய்த்து
அழியாத மூச்சுமுட்டி முறைத்துப் பாய,
அங்கவரும் சிலகணங்கள் கலைய ஒற்றார்!
பழிஏதும் வந்ததுவோ என்றே எண்ணிப்
பார்வேந்தர் பலநினைத்துக் கூர்ந்து பார்த்தார்! 166

அதற்குள்ளே தேர்ஓடி குடிசை ஓரம்
அடக்கமுடன் நின்றதுவே! அங்கே நின்று
பதறாத சீடரெலாம் பார்த்து நின்றார்!
பலவாக அவர்களும்தான் கூடி நின்றார்!
நிதம்நிதமும் தவமியற்றி பயிற்சி செய்து
நீங்காத உடல்வளத்தைப் பெற்ற தாலே
விதவிதமாய்ப் போர்ப்பயிற்சி தானும் கொண்டு
விளங்குவதை மாமன்னர் பார்த்து நின்றார்! 167

மரத்துஇலை அசைவினிசில சீர்மை யோடு
மனிதமன ஒளிகூட்ட, தெளிவு காட்ட
திரண்டெழுந்த தெய்வீக சாயல் பெற்று
திக்கெல்லாம் புகழ்ப்பெற்று, தீமை தன்னை

அரசாட்சி தனில்போக்கி, அன்பும் காட்டி
அசையாமை நிலையோடு வசிட்டர் வாழ்ந்தார்.
குரலினிலே குழைவோடு மன்னர் தானும்
கும்பிட்டு அருகினிலே சென்று நின்றார்! 168

அரசியவள் மன்னருக்கு அருகி ருந்தாள்!
அமைதிமிகு ஆசிரமம் மகிழ்ந்த தங்கே.
திரட்சிமிகு மலர்கூடை கவிழ்ந்த தங்கே!
திரண்டனவே மலரெல்லாம் பாதம் ஓரம்!
அரசிக்கு மனம்கனிய வணங்க ஒற்றாள்!
ஆமரசர் கனிவோடு நெகிழ்ந்த ஒற்றார்.
திரண்டுவிட்ட சீடரெலாம் அவர்கள் காலில்
திரளாக வீழ்ந்திருந்து வணங்க ஒற்றார்! 169

தேன்பிழிந்தார்; மணம்பிழிந்தார்; உளம்பி ழிந்து
தித்திக்கும் அன்பினையே அளிக்க வந்தார்!
வான்பிழிந்தார்; வளம்பிழிந்தார்; வாய்பி ழிந்து,
வளமளித்து ஆதரவும் வாழ்க என்றார்.
மான்கொம்பின் அழகெடுத்து அருகில் வைத்தார்;
மலைபோகம் மணப்பொருளைச் சேர்த்து வைத்தார்.
தான்என்னும் அகந்தையினைக் கொன்ற தாலே
தழுதழுத்துப் பணிவிடைகள் செய்ய ஒற்றார்! 170

அமுதத்தை ஆர்ந்தெழுத்தார்; அள்ளி அள்ளி
அழகுமிகு குடங்களிலே தெளித்து வைத்தார்;
கமுகதனின் சாறதுவும் சேர்த்து வைத்துக்
கலைமானின் தோல்விரித்து அமர வைத்து,
"அமுதமென எம் இல்லம் வந்தீர் ஐய!
ஆசிகள்தான்" எனக்கூறி வசிட்டர் வந்தார்!
திமுதிமுவென சீடர்களும் தொடர்ந்தார் அங்கே!
திகழ்ந்ததுவே பெருமகிழ்ச்சி வெள்ளம் எங்கும்! 171

தந்தங்கள் சிலகொணர்ந்தார்; முத்தை அள்ளித்
தந்துவிட்டுப் பாதத்தில் வணங்கி நின்றார்!
அங்குவந்த சிலசீடர் மாணிக் கத்தை
அளவாகப் பதித்திட்ட முடிகொ ணர்ந்து
தங்கிவிட அறம்காட்டில் தலையில் வைத்தார்!
தந்திட்டார் விலையில்லா ஆடை யெல்லாம்!
எங்கிலுமே ஆசிரமம் அதனில் பொங்கும்
எழிலான ஒளிபாய்ந்து நிறைந்த தங்கே! 172

குடிசையிலே வாழ்ந்திருந்த வசிட்டர் தாமும்
குவித்தெடுத்துக் கரமதனை 'ஓம் ஓம்' என்றார்!
அடித்ததுவே அழகான இளமை காற்று!
அதில்பறந்து செடிமலர்கள் வானில் சென்று,
நடிக்கின்ற நாட்டியத்தின் ஓசை தன்னை
நலமாக எழச்செய்ய விண்ணின் ஓரம்
முடிமன்னர் மகிழ்ந்துவிட நடனக் காட்சி
முகிழ்த்தெழுந்து முழங்கிற்று! முனிவர் அன்றோ! 173

அமர்ந்திருந்த மாமன்னர் அருகி ருந்த
அமைதிமிகு சபலாவை உற்றுப் பார்த்தார்.
சமமான புல்தரையில் இருந்த தாலே
சரியான சீடரெலாம் சூழ்ந்தி ருக்க
கமகமக்கும் மலர்மணமும் சூழ்ந்தி ருக்க
கலைபொருளின் குவியல்கள் சேர்ந்தி ருக்க
தமதாக்கி அருளதனை ஆசி தன்னைத்
தந்திடவே வசிட்டரவர் தொடக்கம் வைத்தார்! 174

"நாடதனை ஆள்கின்ற மன்ன! ஆசி
நலமளிக்கும் மாமன்ன! ஆசி! ஆசி!
காடதனை தேடிநிதம் வந்து வந்து
கண்டென்னை வணங்குகிறாய்! நன்றி! நன்றி!

நாடதனில் யாவரும்தான் நலமா? சான்றோர்
நலமாக உள்ளாரா? முனிவர் எல்லாம்
வாடலிலே இல்லாமல் வளத்தில் ஆழ்ந்து
வளம்காக்க யாகங்கள் செய்தார் போலும்" 175

என்றவரும் மெல்குரலில் கேட்டு விட்டு
ஏறெடுத்து அவர்முகத்தை மீண்டும் பார்த்தார்.
தன்னுடைய முக்கோலை உயர்த்தி வைத்துத்
தாங்கிடவே கரமதனை அதன்மேல் வைத்தார்.
இன்மையினைப் போக்கிவிடும் கமண்டல நீரை
இதமாக அவர்களது கரத்தில் விட்டார்.
தன்கரமே அறம்வார்க்கும் கரமே அன்றோ!
தாழ்மையுடன் மன்னரதை ஏற்றுக் கொண்டார். 176

"அறம்வாழ அருள்வாழ அன்பும் வாழ
அகம்வாழ புறம்வாழ ஆண்மை வாழ
திறம்வாழ வரம்வாழ திண்மை வாழ
திலகம்போல் கற்பென்றும் வாழ வாழ
மறம்வீழ களவெல்லாம் கழிந்து வீழ
மானத்தைக் கொல்லும் நெறி ஒழிந்து வீழ
புறமுதுகு காட்டுகிற பண்பு வீழ
புதுமைகல் செழித்தோங்க வாழ்க! வாழ்க!" 177

## நாடு

"நாடென்றால் என்ன அது? மக்கள் கூட்டம்
நடக்கின்ற வீதியதா? தெருவும் தானா?
பாடென்று சொன்னவுடன் பதங்கள் பாடும்
பாட்டுடைய வேசையரின் இடமே தானா?

தேடென்று சொன்னவுடன் திரியும் அந்தத்
திகழ்கின்ற ஒற்றர்களின் இடமே தானா?
கூடென்று சொன்னவுடன் கூடும் மந்தக்
குவிந்துவிடும் ஆட்டுமந்தை மனிதர் தானா?" 178

"நாடென்னால் என்ன அது? ஓங்கி நிற்கும்
நாட்டிரும் மாளிகைகள்! கூடம் தானா?
கோடென்று கூறிவிடும் இடத்தில் எல்லாம்
குவிந்துவிடும் மனைவாழும் பொருள்கள் தானா?
சாடென்று சொன்னவுடன் பொங்கி பொங்கி
சதிராடும் வாள்வீரர் வாளே தானா?
மேடென்று ஒன்றுவைத்து அதிலே நின்று
மிரட்டிவயன் வளம்சேர்க்கும் வாழ்வு தானா?" 179

"மன்னரே! யான் ஒன்று சொல்வேன்! கேப்பீர்! கேட்டு
மதிப்புவர, நாடுவர ஆட்சி செய்வீர்!
இன்னமுதம், இன்முகத்தின் இனிய சொற்கள்
இல்லாத வயிறதற்கு உணவு காணல்,
தன்னடக்கம், தமிழ்ப் போற்றல், தரணி மீது
தாங்கிவிடும் உளவுவதனில் ஆற்றல், போகம்
என்றென்றும் குறைத்துவிடல், கூடி வாழ்தல்,
எழுச்சியொடு அறச்சாலை அமைத்துக்காட்டல்
அன்போடு அருளோடு இனிமை சேர்த்தல்
அத்தனையும் அரசர்க்கு வேண்டும் பாம்பே" 180

"பசிக்கின்ற கூட்டங்கள் பெருகிவிட்டால்
பணமேடை பறந்துவிடும்; போரும் பொங்கும்.
நசிகின்ற குருதியது! நாச மானால்
நாட்டில் வரும் பேரெழுச்சி! அமைதி போகும்!
சசிகின்ற நெஞ்சோடு காலம் கண்டு
கலைத்துவிட வேண்டுமந்த செல்வர் கூட்டம்!
பசியன்னோ? பதைக்குமது! பதைப்பு வந்தால்
பூாணங் பட குழியில் விடும்! கூத்தே ஆகும்!" 181

"முனிவர்க்கு ஆசிரமங்க கள்எல் லாமே
முழுமையுடன் கட்டிதர வேண்டும் மிங்கே!
தனியாகி காடுமேடு அலைவோர் பாவம்!
தவித்திடுவர் உணவதுதான் இன்றி நாளும்!
பனிக்காற்றில், கொடும் வெயிலில் சிக்கி சிக்கிக்
குலைவார்கள்! நெஞ்சத்தால் துறந்தோர் இங்கே!
முனிவர்க்கு சிறுவீடு போதும்! போதும்!
முழுமையதை—நிறைவதனைத் தேடல் செய்வர்" 182

"வயலுக்கு நீர்வேண்டும்: வளமும் அங்கே!
வளர்ந்துவிட நீர்தேவை! மன்ன! நீயும்
பயம்போக்கி, தயக்கத்தைப் போக்கிப் போக்கிப்
பல ஏரி குளம்வெட்டி அணையும் கட்டி
நயமாக நீர் வளத்தைக் கட்டிக் காப்பாய்!
நீரன்றோ? உருண்டுவிடும்! ஓடிப்போகும்!
கயம்கண்டு, கரைவெட்டிச் சுவரும் போட்டுக்
கலைவின்றி, தேக்கமதை ஆக்க வேண்டும்." 183

என்றெல்லாம் வசிட்டர்தான் மொழித லுற்றார்!
ஏற்றதனை மித்திரரும் கேட்க லுற்றார்!
தன்விழியை அவர் சாய்த்துச் சபலா தன்னைத்
தவறாது பார்ப்பதனை வசிட்டர் தானும்
தன்நோக்கில் கண்டங்கே நோட்டம் விட்டார்!
தன் இதழை விரித்தாங்கே சிரிப்பு திர்த்தார்!
"என்னஅது! திருநோக்குப் பசுவின் மீதோ"
என்றவரும் சிறுநகைப்பில் கேட்டு வைத்தார்! 184

"நன்றதுதான் கேட்டீர்கள் முனிவர் வேந்தே!
நாடிதனில் எங்கோ ஓர் காட்டில் நின்று
பன்மொழியார் பன்நாட்டார் புகழ ஏத்த
பக்திவழி பர்ப்பிநிதம் வாழ்தல் செய்வீர்!

என்போன்ற மன்னர்க்கு வழியும் காட்டி
எழுதாமல், வரையாமல் விழிய சைத்துப்
பன்மொழிகள் பகர்கின்றீர்! ஆட்சி வெல்ல
பலசெய்தி சொல்கின்றீர்! நன்றி ஐய!" 185

"நாட்டிற்கு அறவோர்கள் சோலை போன்றோர்!
நடுங்கவைக்கும் வெயிலதனைக் நிழலால் போக்கிக்
கூட்டுவித்துக் குளிரதனை, இனிமை காட்டும்
குயில்பாட்டை, அளித்துவிடும் சோலை அன்றோ,
வாட்டுகிற காமவழி மறத்தின் போக்கு
வாழ்விதனை வெயிலாகி சுட்டு வீழ்த்த
நீட்டுகிற சுடுதீயைப் போற்று பக்தி
நிறைசோலை காட்டிடுவர் முனிவர் அன்றோ?" 186

## சொற்போட்டி

"மும்மலங்கள் ஆர்ந்தெழுந்து மூச்சைக் கட்ட
முடிபோட முயலுகையில் முன்னால் வந்து
தம்முடைய விழியசைவில் விடத்தைப் போக்கி
விரிவான வீடதனை நாடும் காண
இம்மென்னும் ஒரு நொடியில் வளைத்துக் காட்டி
இகம்வென்று, பரம் கண்ட முனிவர் தாங்கள்!
தம்முடைய இன்குடிசை ஓரம் தன்னில்
தவழ்கின்ற பசுவிதனைக் கண்டேன்! கண்டேன்" 187

"வியந்தேன்யான்! இந்த பசு வந்த போது
வியப்பதும் வந்ததுவே! என்னே! விந்தை!
தயங்காது கேட்டதெல்லாம் அளிக்கும் அன்றோ?
தவறாது பல பொருள்கள் அளிக்கும் அன்றோ?

பயமின்றி, காடெல்லாம் சுற்றி மேய்ந்து
கலையாட்டம் பல ஆடி நடக்கும் மன்றோ?
தயை கூர்ந்து அருளுங்கள் பசுவை என்றன்
தனிகொட்டில் அரண்மனையில் சேர்ப்பேன்" என்றார் 188

"நெஞ்சினிலே நினைத்ததெல்லாம் அளித்துக் காக்கும்;
நிறைவாகக் கேட்டதெல்லாம் கொடுத்துக் காக்கும்,
தஞ்சமென அடிசார்ந்தால் மணியும் பொன்னும்
தவறாது அளித்துவிடும்! பொருளும் ஈயும்?
எஞ்சாது எல்லாமும் தெளிக்கும் எங்கும்!
என்னபசு அது சொல்வீர்! முனிவர் ஐயா?
பஞ்சத்தை நாட்டினிலே துடைத்துப் போட
பசுவதனைப் பயன்படுத்திக் காக்க எண்ணம்!" 189

என்றவரும் கேட்கையிலே வசிட்டர் அங்கே
எண்ணமுடன் மித்திரரின் முகத்தைப் பார்த்தார்.
தன்குடிசை வீட்டினிலே மேயும் அந்தத்
தவபசுவை அரண்மனைக்கு அனுப்ப லாமா?
என்வயமாய்க் குழவியைப்போல் திரியும் அந்த
எழிலான தெய்விகத்தின் பசுவை, அங்கே
தின்பதற்கு அரண்மனையின் பொருளை, இன்றோ
திருப்புவது நலமில்லை' என்றே எண்ணி 190

"இப்பசுதான் தெய்வீகத்தால் தவத்தால் வந்த
இகம் போற்றும் பரமதனின் பசுவே ஆகும்!
எப்படித்தான் அதுவருமோ? அரண்கள் மிக்க
ஏல்லையிலாக் கோட்டையுளோ? கொட்டில் உள்ள?
இப்படியே இது திரியும், இங்கே நாளும்
இருந்துவிடும்; அன்பாக ஓடும், ஆடும்!
தப்பெதுவும் என்ன உண்டு? குடிசை தன்னில்
தங்குவதில் இப்பசுதான்?" என்றே கேட்டார்! 191

மித்திரரும் அது கேட்டார், அதிர்ச்சி யுற்றோர்!
'மிகையாக ஏதேனும் கேட்கவில்லை?
அத்தனையும் ஒரு பசுவே! கேட்டேன் நானும்!
அதனையும்தான் மறுத்துவிட்டார்! என்னே? என்னே!
கத்துகிற பதிவதனைக் கட்டிக் காக்க
கலம் நீட்டிப் பாலதனைக் கார்ந்து காக்க
இத்தனைப்பேர் இருப்பதனால் மறுத்தார் போலும்
இப்படியோ ஆயிற்று? நினைவில் ஆழ்ந்தார்! 192

"பெருமுனிவ! அருள்கூர்க! அபயம் ஆள்க!
பெருமைமிகு பசுவிதுதான்! வளமும் உண்டு!
திருதிருவென மிரட்சிமிகு விழிகள் உண்டு;
தித்திக்கும் செயலுண்டு; கருணை உண்டு!
அருள் ஆள்க! அளித்ததனை ஆள்க!" என்று
அன்போடு குரல்தழைக்க கேட்டார் அங்கே!
தருகின்ற உளமதனை உடைக்க, அங்கே
தன்னுடைய வேண்டுதலை முன்னே வைத்தார். 193

"நாட்டிற்கு வேந்தர்தான் தாங்கள்! எல்லா
நலமனைத்தும் அளிக்கின்ற அரசர் அன்றோ?
காட்டிற்கும் வந்தென்னைக் காணு கின்ற
கனிவதுவும் உள நன்றோ? நன்றி! ஆயின்,
காட்டுள்ளே ஆசிரமம் தழைக்க வாழும்
கலைவாழ்வின் சபலாவை வேண்டும் என்று
வேட்டினையே வைத்தல்போல் கேட்டல் ஏனோ?
வியப்பதுதான்!" எனச்சொன்னார்
வசிட்டர் அங்கே! 194

"முனிவரவர் சொல்கேட்டேன்! ஐய ஏனோ
முனிந்தீர்கள்? வேண்டலிலே கேடும் உண்டோ?
தனியாக இப்பசுவும் இங்கே தங்கி
தனிமையிலே வீழ்கிறது? நாமு வந்தால்

தனியளிக்கும்; உணவளிக்கும்; பசியைப் போக்கும்!
கவலையதைப் போக்கிவிடும்; வளமும் காட்டும்!
மனிதர்க்கு நட்பளிக்கும்; நலம ளிக்கும்!
மனந்திறப்பீர்" எனக்கேட்டார் விசுவா அங்கே! 195

வசிட்டரதை ஒருகணத்தில் கேட்ட போது
வளைந்தெரிந்துங்கி ஓடிவிட துடிக்கு மந்த
நசிவில்லாச் சபலாவைக் காண லுற்றார்!
நைந்துவிடும் அதன்போக்கை அறித லுற்றார்!
"வசிக்கின்ற இப்பசுதான் குடிசை விட்டு
வாழாது! இறந்துவிழும்! காண்பீர் வேந்தே!
பசிபோக்க உழவுண்டு! பசுவும் ஏனோ!
பழக்கமிலை! வாராது பசுவே!" என்றார்! 196

அதனைத்தான் கேட்டுவிட்ட விசுவா தானும்
அந்தஇடம் பெயர்ந்ததுபோல் கலைய லுற்றார்!
பதமாக வசிட்டரும்தான் வெட்டிப் பேசி
பலவாறு மறுத்துவிட்டார்; அறவோர் தம்மை
விதமாகத் தன்பக்கம் இழுக்கப் பார்த்தார்!
விளம்பிடவே செய்திகளைத் தொடங்க லுற்றார்!
எதனையுமே எப்போதும் வெற்றி கொள்ளும்
எழில்விசுவா மித்திரரும் குலைந்து போனார்! 197

கரமிரண்டை சேர்த்துடனே பிசைத வுற்றார்!
கண்ணிரண்டை வளைத்துடனே மயக்க முற்றார்!
நிரவலுடன் மொழிபேசி வெல்லு தற்கு
நீளமுடன் பெருமூச்சு ஒன்றே விட்டார்!
கரவில்லா நெஞ்சமது! நேர்மை நெஞ்சம்!
கனியும்தான்! ஆனாலும் மன்னர் அன்றோ?
திரளாக மறுத்தலினைக் கேட்ட போது
திரண்டெழுந்தார்! அதிகாரம் பேசும் அன்றோ? 198

"எல்லையிலே வாழ்கின்ற முனிவர் ஐய!
என்னஇது? வேடிக்கை காட்டு கின்றீர்?
அல்லதைப் போக்கிடவே சபலர் கேட்டால்
அதனைத்தான் மறுக்கின்றீர்! விந்தை! விந்தை!
எல்லாமே என்ஆட்சி உரிமை ஆகும்!
எதற்கிந்த வம்புகளே! போரும் வேண்டாம்!
செல்லுமுன்னே கேட்கின்றேன்! சிந்தை செய்வீர்!
செலுத்திடுவீர் சபலாவை அரண்மனைக்கு" 199

"அரசியலில் எதுஅறமோ? எண்ணிப் பார்ப்பீர்?
அதனைத்தான் அருளோர்டு நானும் சொன்னேன்!
தரமறுத்தல் அறமன்று! ஆட்சி பீடம்
தண்டனைகள் தந்துவிடும்! கொதித்தால் மீண்டால்,
அரசனது ஆணைதான் காட்டுள் பாயும்!
அரசாட்சி ஆணையது! முனிவர் இல்லம்
தரமறுத்தால், தாங்காது! சட்டம் பேசும்!
தரணியது அரசனது கரத்தில் பாவை!" 200

"நல்லதொரு பசுஅதுதான்! நாட்டின் மக்கள்
நாளெல்லாம் பெருநன்மை காணு தற்கு
எல்லாமும் பெற்றிடவே, மகிழு தற்கு,
எழுந்துவரும் வறுமையினைத் துடைப்ப தற்குக்,
கல்விமிகு சபலாவை வேண்டி நின்றார்!
கடவுளது சபலாதான்! ஆனால் கூட
எல்லாரும், மக்களெலாம் உரிமை கேட்டால்
எழுத்ததனை அளித்திடவே அறமும் ஆகும்" 201

"ஏன் ஐயா! பெருமுனிவ! வசிட்டர் தேவ!
ஏன்இந்த மாறாட்டம்? கொள்கை ஆட்டம்?
கான்மேயும் இப்பசுதான் நாடு மேய்ந்தால்
கனிவளங்கள் பலபெருகும்! வறுமை போகும்!

கோன்கோலும் நிமிர்ந்துவிடும்! கொடுமை சாகும்!
கொல்லாமை பெருகிவரும்! கலகம் போகும்!
ஏன்தாய்கள் மறுக்கின்றீர்! மக்கள் தானே
எனைஇங்கே கேட்பதற்குத் தூண்ட ஒற்றார்?" 202

"இறைபசுவே எனச்சொன்னீர்? உண்மை ஐய!
இருந்தால்தான் என்னையான் ஒன்று கேட்பேன்!
பறைஅறைந்து இறைமையதைப் பரப்பி வாழும்
பார்போற்றும் மன்னன் நான்! பசுவை கேட்டால்
கறைபடிந்த வாதமதாய் ஒதுக்கித் தள்ளிக்
கடைசியிலே தள்ளுகிறீர்! ஏனோ? ஏனோ?
குறைஎன்ன வந்ததில்? அறியேன் யானும்?
கொல்லவிலை! நன்மைக்கே கேட்டேன் ஐய!" 203

"காட்டிற்குள் அதுகிரிந்தால் நாட்டிற் கென்ன?
கடைவாயில் குடிசையிலே திரிந்தால், நாடு
கோட்டுக்குள் சுழலுகிற சக்க ரம்போல்
குலையாதா? வளையாதா? எண்ணிப் பார்ப்பீர்?
நாட்டுக்கு நன்மையெனில் இறைவன் கூட
நடுத்தெருவில் மக்கள்கதைப் பேசவேண்டும்!
காட்டுக்குள் குவிவதிலே பயன்தான் என்ன?
கடவுளவர் மக்களது குரலில் உண்டு" 204

மன்னாதைச் சொல்சொல்லிக் காட்டும் போது,
மாமுனிவர் வெகுண்டெழுந்தார்! முனிவர் அன்றோ?
தன்னுடைய கமண்டலத்தை எடுத்துச் சாய்த்துத்
தன்கோபம் தனை அங்கே காட்ட லானார்.
பின்நின்ற வீரர்களும் சீடர் எல்லாம்
பிள்வான பேச்சதனைக் கேட்ட போது
என்நடக்கும் எனஎண்ணி மயக்கம் கொண்டார்!
ஏனென்றால் தவம்—ஆட்சி போட்டி அன்றோ? 205

"ஓம்தேவ! பேர்இறைவ விண்ணில் சூழும்
ஓர்கடவுள் பேரீச! அருள்க! ஆள்க!
'ஆம்'என்று ஏ!மன்னா சொல்லச் சொல்லி
ஆணையதைக் காட்டுகிறாய்! எச்ச ரிக்கை!
நாம் எவர்நீ அறிவாயோ? வசிட்டர்! ஆமாம்!
நாநிலமே என்னுடைய காலின் கீழே!
ஓம்என்றால் விண்வாழும் தேவர் எல்லாம்
ஓடோடி வந்திடுவர்! நாடே போகும்!'' 206

''வேடிக்கைச் செய்கின்றாய்! பசுவைக் காட்டி
வியப்பாக என்னுடைய தென்றே நீயும்
கூடியொரு படையதனை வைத்துக் கொண்டு
கூவுகிறாய்! என்னஅது? குடிசை தன்னில்
தேடிவந்து மிரட்டலினைச் செய்தாய்? நன்றோ?
திரண்டுவிடும் தவஆற்றல்? எரிந்தே போவாய்!
ஆடிவரும் சபலாதான் இந்தக் காட்டின்
அழகுமிகு பசுவாகும்! தருதல் ஆகா!'' 207

''தவம்ஆற்றி. இறைபோற்றி, யாகம் செய்து,
தண்ணீரில் விழிமூடி மூச்சைக் கட்டித்
தவம்செய்து, எரிமூட்டி அமர்ந்தி ருந்து.
தவறாமல் ஆயிரமாய் நியதி போற்றி,
அவம்இன்றி, அல்லல்பல வென்று வென்று
அமைதியினில், மௌனத்தில் ஆழ்ந்து ஆழ்ந்து
தவஒளியில், தவவாழ்வின் மோனத் தாலே
தலைமையுடன் பெற்றேன்நான் பசுவை! இங்கே'' 208

"வணங்கிடவே வந்துநின்று அதனைப் பார்த்து
வளம் காண 'பசுவேண்டும்' என்று கேட்டுக்
கணங்கணமும் பெருந்துன்பம் அளிக்கின் றாய்நீ !
கலைந்துவிடும் அரசாட்சி! கண்மணி ரண்டும்
இணக்கமின்றி குருடாகும்! கறியாய் நீயும்?
இமயத்துத் தவஒளியை வெல்லு தற்குத்
தணதணக்கும் சட்டமதா? வேண்டாம் மன்ன!
தரணியிது தாங்காது! நாச மாகும்" 209

"வாழ்க்கையினை ஒதுக்கிவிட்டுக் காட்டின் ஓரம்
வாழ்வதற்குக் குடிசையினை அமைத்துக் கொண்டு
ஆழ்கையிலே பெருந்தவத்தில் நீயும் வந்து
அதைப்போக்க முயல்கின்றாய்! காடும் பொங்கி
பாழ்படுத்தும் உன்நலத்தை! அறவோர் வாழும்
பாதையது காடே தான் தவங்கள் உண்டே!
காழ்ப்பதனை நீ கொண்டாய்! விலகி செல்செல்"
கமண்டலத்தைக் கரம்பற்ற முனிவர் சொன்னார்! 210

"நாட்டிற்குள் எல்லைக்குள் இருக்கும் எந்த
நல்பொருளும் அரசாங்க உடைமையாகும்!
காட்டிற்குள் இருந்தால்தான் என்ன? இங்கே
கண்பட்ட பொருளெல்லாம் மன்னர்க் காகும்!
கோட்டிற்குள் நடுபுள்ளி மன்னர்! அந்தக்
கோலுக்கு அடிபணிதல் அறவோர் ஆற்றும்
நாட்டிற்குப் பெருநன்மை! அறிதல் வேண்டும்!
நடுங்க வைத்தல் தவம்காட்டி அழகே அன்று!" 211

"தவம்பெற்று இறையருளைப் பெற்றுக் கொண்டும்
தன்வழியில் 'சாபங்கள்' அளித்திருந்தால்
தவறன்றோ? அரசாட்சி நடத்தல் ஆமோ?
தன்கடமை ஆற்றுகிறேன்! தவறும் என்ன?

அவம் அளித்துச் சபிப்பதிலே நன்மை என்ன?
அரசாங்கம் பசுகேட்டல் 'பொதுமை' நோக்கே!
தவறாக்கி அதைக்காணல் தவறே ஆகும்!
தானேன் நான்! குடிமக்கள் மன்னன் நானே!" 212

வெகுண்டெழுந்து மித்திரரும் வாதம் செய்தார்.
வெண்கொற்ற குடையதனின், செங்கோல் தன்னின்
தகுதியினைக் காப்பதனைக் கடமை யாக்கித்
தளராது செயல்படுவோர் விசுவா! அங்கே
மிகுதியுடன் வசிட்டர்தான் மறுத்தபோது,
மிரளாமல் தன்கடமைச் செய்ய ஒற்றார்!
பகுத்தெதுவும் ஆராயும் மன்னர் அன்றோ?
பதறாமல் தவமதனைக் கேள்வி கேட்டார்! 213

வசிட்டரிடம் சாபமெலாம் மிகவும் உண்டு!
வணக்கமிகு பிரம்மமுனி அவரே! தேவர்
பசிபோக, தவபசிதான் அருளில் மூழ்க
பஞ்சாகி அவர்பாதம் பணிதல் உண்டு!
நசித்துவிடும் தவக்கோலம் உண்டு! சாபம்
நகநுனியில் தேக்கிவைக்கும் ஆற்றல் உண்டு!
வசிப்பதுவும் காடுதான்! ஆனால்கூட
வான்அடங்கும் அவர்கரத்தில் தெரிவார் மன்னர்! 214

ஆனாலும் பசுகேட்டு மீட்க எண்ணி
அடங்காத வேதனை செய்தே விட்டார்!
கோனாகி குவலயத்தை ஆளல் செய்து
குடிகளெல்லாம் மகிழ்வடையச் செய்யும் மன்னர்!
தானாகி தன்னுடைய கடமை காட்டத்
தகைமையுடன் வாதாட நினைய ஒற்றார்!
கோணாகி விட்டதினால் ஆட்சி பற்றி!
கொள்கை பல விளக்கிடவே தொடங்க லானார்! 215

"தவஞான பெருமுனிவ! வசிட்டர் என்னும்
தவறாத எழில்வடிவ முனிவர் கோனே!
குவலயத்தில் அரசர்க்குப் பணிகள் உண்டு!
கோடிவரும்; கோடியது போகும்; ஆனால்
நவநவமாய்ப் பல செயல்கள் செய்ய வேண்டும்!
நாட்டிற்கு நன்மையது ஆகவேண்டும்!
தவறினால் சமயமும் தான் சரிய வேண்டும்!
தாங்காது காவிஉடை கயமை தன்னை!" 216

"செங்கோலும் வளைந்துவிடும்; வீழ்ந்து போகும்!
செகமெல்லாம் தூற்றிவிடும்; தூறல் செய்யும்!
எங்கெங்கு பார்த்திடினும் சமயம் தன்னில்
எப்படியோ குப்பை எல்லாம் சேர்தல் உண்டு!
தாங்கிவிட்டால் அதுவெல்லாம் ஆட்சி தன்னைத்
தள்ளிவிடும்! காவிக்கு ஆற்றல் உண்டு!
மங்கிவிடும் அரசாட்சி ஒளியும்! காவி
மடக்கிவிடும் மன்னரையும்! அறிவேன் ஐய!" 217

"உணவின்றி ஊர்மக்கள் உருகும் போது;
உலர்ந்துவிட்ட வயிறோடு வீழும் போது,
கணங்கணமும் செல்வங்கள் தேடித் தேடிக்
கலையாமல் மந்திரத்தால் சேர்த்துச் சேர்த்து
மணக்கின்ற புதுவாழ்வு பெற்றே வாழ்வீர்!
மக்களதை ஏற்பாரா? ஏற்க மாட்டார்!
பணம் குவியும் சபலாவின் மந்திரத்தால்!
பதைப்பார்கள் பசியதனால் எளிய மக்கள்" 218

"ஓம் என்றால் உதிர்ந்துவிடும் செல்வச் சேர்ப்பு!
'ஓம் என்றால் குவிந்துவிடும் உலகச் சொத்து!
'ஆம்' என்றால் ஆர்ந்துவிடும் சீடர் கூட்டம்!
'ஆம் என்றால் அலைந்தெழும்பும் புனிதர் கூட்டம்!

கூம்பாத மலர்வடிவ ஆசனத்தில்
குளிர்காய்ந்து வாழ்க்கின்றீர் வசிட்டர் ஐய!
கூம்பிவிட்ட வயிறோடு கரைந்து காய்ந்து,
கொலைகளத்து வீரன்போல் மக்கள் உள்ளார். 219

"வளமுண்டு' உணவதுவும் உண்டு! உண்டு!
வலுமையது அதிகமில! ஆனால் கூட
தளதளக்கும் சபலாவை அழைத்துச் சென்றால்
தத்துவிடும் உணவதனை; பகிர்ந்தெ டுத்து
வளவளக்கும் மனிதர்க்கு அளித்து வாழ்ந்தால்
வாழ்க்கையது மலர்ந்துவிடும்! நாடு வாழும்!
களவதுவும் குறைந்துவிடும்! இன்பம் பாயும்!
காலமெலாம் அருள் பொழியும்! அமைதி யோங்கும்! 220

"அரசர்க்கு எப்போதும் நாட்டு நன்மை
ஆம்முதலில் உயிராகும்! அதற்குப் பின்பே
வரம்அளிக்கும் சமயங்கள்! குருவும் எல்லாம்!
வாழ்வதுவும் வளம் சேர்த்தல் ஆட்சி யாலே!
கரம்குவிந்தால் மன்னர்அடி பணிவர் வேந்தர்!
கரம்நீட்டிக் கப்பத்தை வைப்பர் காண்பீர்!
அரமாகும் அரசாட்சி காவி இங்கே
அதிகமுடன் சாபங்கள் அளிக்க வந்தான்!" 221

அதுகேட்ட வசிட்டர்தான் ஆர்த்தெ ழுந்தார்!
அவர் முகத்தில் கோபமது மிகுந்தெ ழுந்து
பதுமஅடி தத்தளிக்க பாய்தல் செய்து
பல அடிகள் நடந்துவிட்டார்! துள்ளல் செய்தார்!
சதுர்ஆடும் அவர் அங்கே பசுவின் முன்னால்
சார்ந்துநின்று சிலபேச நின்று விட்டார்!
மதுகுடித்த வீர்போல் சீட ரெல்லாம்
மலைத்துவிட நின்றிருந்தார்! பசுஆ டிற்று! 222

"முனிவர்க்கு வானகமே வணங்கும்; வந்து
முகம்கண்டு பாதத்தில் கலக்கும்; தேங்கி
தனிவோடு வரம்தந்து வாழும்; ஆடி
கரைந்துருகி வரிசையிலே நிற்கு மன்றோ?
தனியாக வந்தென்னை வம்பு செய்து
தகர்க்கின்றாய்! பசுவை நீ கேட்டு வைத்தாய்!
மனிதர்க்கு அருள்வழங்கும் என்னைக் கண்டு
மதர்ப்போடு சழக்கினிலே ஆழ்த்திவிட்டார்!" 223

"நெஞ்சத்தில் இறையுண்டு! அறமும் உண்டு;
நேர்மையதன் வளமுண்டு; நீதி யுண்டு;
அஞ்சாத அருள்உண்டு; ஆண்மை உண்டு!
அசையாமை மிகவுண்டு; ஆர்வம் உண்டு!
எஞ்சிவிடும் உயிர்தனைக் காத்தல் உண்டு
ஏறிவிடும் மலமதனைக் கழித்தல் உண்டு!
தஞ்சமென நீ வீழ்ந்தால் பிழைப்பால்! அன்றி
தவறாது என்சாபம்! எச்சரிக்கை!" 224

"முக்கோடி பெருந்தேவர் என்றன் முன்னால்
முகம்தனிந்து அடிபணிவர்' விசிட்டர்! காண்பாய்!
தக்க பல யாகங்கள் செய்து செய்து
தவறாத வரமனைத்தும் பெற்றேன் வாழ்ந்தேன்!
திக்கெல்லாம் என்புகழே! கொடியே! வாழும்!
திகைத்திடுவர் 'பிரம்மமுனி' என்றே சொன்னால்?
இக்கணமே என்பாதம் பணிந்து வாழ்வாய்!
இல்லையெனில் தாங்காது அயோத்தி நாடு!" 225

வானகமும் பிளந்துவிடும்; விண்ணு மிங்கே
வழிந்துவிடும்; கலைந்துவிடும்; தூளாய்ப் போகும்!
கானகமும் கவிழ்ந்துவிடும்; கழிந்தே போகும்!
காடுதனில் மிருகமெலாம் கத்தும்! ஓடும்!

கோனதுவும் கோலதுவும் முறிந்தே போகும்!
குவிந்துவிடும் கண்ணீரும் எங்கும்! எங்கும்!
மோனத்து வடிவதுதான் வெடித்தால் எல்லாம்
முழுநாசம் ஆகுமென்றார் வசிட்டர் அங்கே!" 226

"நல்லதொரு திருக்குறளை ஆக்கித் தந்த
நாயனார்தான் என்சொன்னார்? அறியீர் போலும்!
பல்லரணும், படைகுடிகூழ் அமைச்சும் நட்பும்[1]
பலமாக இருப்பதுதான் ஆட்சி என்றார்.
வல்லமைதான் இவற்றாலே வந்து தோன்றும்
வழிவழியாய் ஆட்சியதும் நிலைக்கு மன்றோ?
கல்லாத மனிதரைப்போல் பேசு கின்றீர்!
கடமையது எனக்குண்டு மறந்தா போனீர்?" 227

"அறிவூக்கம், அஞ்சாமை, ஈகை பெற்று[2]
அழகாக ஆட்சியினை ஆள வேண்டும்.
பறித்துவிடல் எனதுரிமை ஆகா திங்கே!
பதைபதைத்துப் பேசுகின்றீர், நன்றே அன்று.
அறியாமை உள்ளவனோ என்றே எண்ணி
ஆனந்த மாகத்தான் அறிவு சொல்வீர்.
முறிகின்ற பால்போல பேசு கின்றீர்.
மன்பதையில் என்சொல்வேன் புரியவில்லை." 228

"மானத்தில் குறையாத அரசு வேண்டும்.[3]
மங்களமாய்ப் பலவற்றைச் செய்ய வேண்டும்
கானகத்தில் அமர்ந்துள்ள தாங்கள் சொல்லும்
கதையெல்லாம் சிரிப்பதுதான்! வேண்டாம்; வேண்டாம்;

---

1. திருவள்ளுவர் திருக்குறள் : 39:1
2. " " : 39:2
3. " " : 39:4

மோனநிலைப் பெற்றேதான் உயர்ந்தே உள்ளீர்!
    மேதினியில் தங்கள்போல் யாரு மில்லை!
போனதெல்லாம் போகட்டும்; சபலா வைத்தான்
    பொறுமையுடன் எனக்களிப்பீர்; வேண்டு கின்றேன்" 229

எனக்கூறி வசிட்டரையே உற்றுப் பார்த்தார்
    எதனையுமே வெல்கின்ற விசுவா ஆங்கே,
தனக்கெனவே தனிவழியை அமைத்துக் கொண்டு
    தரணியிலே வாழ்கின்ற அவரும் அங்கு
மனதினிலே உறுதியினைப் பெற்றுக் கொண்டு
    மங்காத புகழேகு, வாய்த்தி றந்து
சனமெல்லாம் சுற்றியங்கு நிற்கும் போது
    சளைக்காமல் கேட்கவைத்தார் சபலா வைத்தான். 230

## வேறு

புனிதமிகு வசிட்டர் தானும்
    புகழ்மிக்க விசுவா வைத்தான்
இனிமையின் பார்வை தன்னில்
    இமைக்காமல் பார்த்து நின்றார்.
தனியான அவரும் அங்கே
    தவிக்காமல் சொல்ல லானார்,
கனிவான சொல்லைச் சொல்ல
    கருத்துடன் தொடங்க லானார். 231

"மடத்தனமே என்று சொல்லி
    மயங்காமல் பேசு கின்றாய்!
கடவுளே உன்றன் பேச்சைக்
    கயமைதான் என்றே சொல்வார்,

நடக்கின்ற உலகில் நாளும்
நயமாகப் பேச வேண்டும்.
படபடத்துப் பேச வேண்டாம்;
பயனதனால் ஒன்று மில்லை." 232

"பகைகொள்ள வந்து விட்டாய்,
பாழாகப் போவாய் நீயே.
வகையில்லா மனிதர் மீது
வலிமைதான் அற்ற மாந்தர்
திகைத்திட பகைக்க வேண்டும்;
திண்மையைப் பகைக்கின்றாய் நீ[1]
நகைப்பதே வந்து தோன்றும்;
நாநிலம் போற்றும் மன்னா!" 233

"அன்பது இல்லா னாக
அமைந்திடும் துணையும் இங்கு
என்றுமே இல்லா னாக,
ஏற்றதோர் வலிமை குன்றி
குன்றிடும் நிலையைப் பெற்றுக்
குறையினைச் செய்து வாழ்ந்தால்
என்றுதான் பகையை வெல்ல
ஏற்றிடும் சொல்வாய் நீயே![2] 234

"சினத்தினைப் பெற்றுக் கொண்டு
சீர்மையே இன்றி வாழ்ந்தால்
நனவினில் வெற்றி ஆமோ?
நடக்காது உணர்வாய் நீயே![3]

---

1. திருவள்ளுவர் திருக்குறள் : 87:1
2. " " : 87 2
3. " " : 87:4

தனதுடை மனதை என்றும்
தள்ளாது கட்டு ணர்த்தி
சனங்களும் போற்றும் வண்ணம்
சளைக்காமல் வாழ்வாய் நீயே!" 235

"பண்பற்ற போக்கில் வாழ்ந்தால்
பகைவரும்; அறிவாய் நீயே!
எண்ணத்தில் குற்றம் செய்தால்
எந்நாளும் பகைமை தோன்றும்[1]
தன்மையே சிறிது மின்றி
தாளாது பேசு கின்றாய்!
எண்ணிடில் வேடிக் கைத்தான்!
எதற்கிங்கே பேச்சு" என்றார். 236

"காட்சிக்கு எளிய னாகி
கடுஞ்சொல்லை நீக்கிக் காத்து
ஆட்சியை ஆள்ப வன்தான்
அருமையாம் மன்ன னாவான்[2]
மாட்சிமை யோடு அன்றே
மருட்சியே சிறிது மின்றி
ஆட்சியைப் பற்றிச் சொன்னார்
ஆமந்த நாய னார்தான்!" 237

"இன்சொல்லைக் கூறிக் கூறி -
ஈதலைச் செய்து வாழ்ந்தால்
நன்மைகள் பலவும் சேரும்[3]
நானதைச் சொல்ல லாமோ?

---

1. " " : 87.8
2. திருவள்ளுவர் திருக்குறள் : 39:6
3. " " : 39:7

புன்மைகள் இல்லா ஆட்சி
புவியினில் வேண்டு மன்றோ?
என்னதான் கூறினாலும்
எதற்கிந்த வம்பு சொல்வாய்?" 238

"முறையான ஆட்சி வேண்டும்;
முடிவாகக் காக்க வேண்டும்;
இறையென நாலம் போற்றும்
இவ்விடம் அதனை எண்ணு;[1]
நிறைவாக ஆட்சி செய்வாய்;
நீள்நிலம் போற்றும் உன்னை!
அறைமறைக் பயவர்[2] போல
ஆறுதல் வேண்டாம்; வேண்டாம்" 239

"எண்ணத்தில் ஏற்றம் பெற்று
எழுகின்ற சொல்லைத் தாங்கி
புண்பட பேசி னாலும்
பூமியில் பொறுத்துக் கொண்டு
தண்மையாய் ஆள வேண்டும்;[3]
தரணியே போற்றும் உன்னை;
கண்டதைப் பேசி என்னைக்
கலக்கிட வேண்டாம்; வேண்டாம்;" 240

"கண்ணோட்டம் தன்னில் இந்தக்
காசினி சுழலல் உண்டு;
கண்ணோட்டம் இல்லா மன்னர்
கழிந்திடும் சுமையே ஆதுர்;[4]

---

1. ,, ,, : 39:8
2. ,, ,, : 108:6
3. ,, ,, : 39:9
4. ,, ,, : 58:2

திண்ணிய நெஞ்சம் வேண்டும்;
திகைத்திடச் செய்ய வேண்டும்.
பண்புடன் வாழ வேண்டும்;
பாவத்தை நீக்க வேண்டாம்'' 241

என்றங்கே வசிட்டம்தனே் கூற லானார்
எடுத்தெதையும் விளக்கமுடன் பேசலானார்;
அன்றங்கே வாதங்கள் வளர்ந்த போது
வானிலுள்ள தேவர்களும் அஞ்ச லானார்;
துன்பத்தை மறுத்தலிலே அடைந்த அந்த
தூய்மைமிகு மன்னவராம் விசுவா வந்தான்
புன்மையினைப் போக்குதற்கு வழியைக் காண
புதுவிதமாய்ப் பேச்சினையே தொடங்க லானார். 242

"மன்னவரைச் சேர்ந்தொழுகும் போது நல்ல
மதியோடு வாழ்ந்திடவே வேண்டும் மன்றோடு?
அன்போடு தீமுன்னால் அமரும் போது
அதைவெல்ல முன்பின்னாய் நகர்ந்து பின்பு
இன்பத்தை அடைந்திடவே அமர்தல் போல
இகமீதில் பழகிடவே வேண்டும் மன்றோ[1]
என்றைக்கு இது தெரியும் அனைவருக்கும்?
எப்படிநான் இதைச் சொல்வேன்? எண்ணிப்
பார்ப்பீர்? 243

"மன்னரெதை விருப்புதல் தான் செய்கின்றாரோ
மக்களதை விரும்பாமல் இருக்க வேண்டும்.
என்றைக்கும் அது ஒன்றை ஆக்கம் தன்னை
எடுத்தியமபும்; உண்மையது பொய்யே இல்லை?[2]

1. திருவள்ளுவர் : திருக்குறள் : 70:1
2. ,, ,, : 70:2

இன்றைக்கு நமக்கெதற்கு வாத மிங்கே?
இருக்கின்ற சடலாவை அள்ளித் தாரீர்!
இன்பந்தான் அது விளைக்கும்; அறியீ சோ நீர்?
இப்போது வெறும் பேச்சு எதற்குச் சொல்வீர்?" 244

"அரசரையே சார்ந்தொழுகும் போது எந்த
அவசமும்தான் நேராது பார்த்தல் வேண்டும்;
தரமான ஆட்சியெனில் ஐய மின்றி
தரணியிதில் ஆலுதலைச் செய்ய வேண்டும்;
மரத்தைப்போல் உணர்ச்சிகள்தான் இல்லா திங்கே
மனதினிலே பளாவைக்க வேண்டாம் ஐய!
நிரந்தரமாய் அதுதங்கி விட்டால் இங்கே
நிம்மதியே இருக்காது! உணர்வீர் அன்றோ?"[1] 245

"மன்னர்க்கு முன்னாலே செவியில் சொல்லி
மறைபொருளாய் ஏதேதோ பேசு கின்றீர்?
மென்னகையை இதழ்களிலே நெளிய விட்டு
மெருகோடு எப்படியோ பேசு கின்றீர்.
மன்னர்க்கு முன்னாலே அதுபோல் பேசல்
மடத்தனம்தான்; அறியீரோ இதனை இங்கே?[2]
என்னிடத்தில் ஏனிந்த தவத்தின் பேச்சு?
ஏனிந்த தவப் பொருள்கள் புரியவில்லை'' 246

என்றங்கே விசுவாவும் பேச லானார்;
எடுத்தெறிந்து வசிட்டரையே குறைகள் சொன்னார்;
அன்றங்கே தவம்—ஆட்சி தமக்கு நேர்ந்த
அடங்காத சொற்போரை கண்டார் மக்கள்.

---

1. ,, ,, : 70:3
2. ,, ,, : 70:4

சின்னதனில் வந்திட்ட பேச்சு, ஆங்கே
சீற்றத்தால் சொற்போராய் ஆகி விட்ட
நன்மையிலாப் போரதனைக் கண்டார் மக்கள்;
நடப்பதையே அவர்கண்டு மயங்கிப் போனார்! 247

"தவமென்றால் என்ன என்று
தவசியும் தான், கேட்டு விட்டார்,
'தவமென்றால் தனக்கே உற்ற
தாழ்மையினைப் போக்கி விட்டு
அவமான துன்பம் தாங்கி
அடுத்தவர் துயர்துடைத்த'[1]
நவமான இதனை அந்த
நாயனார் சொன்னா ரன்றோ?" 248

தொடர்ந்தவர் சொல்லும் போது
தொடர்ந்திடும் தவமும் நாளும்
படர்ந்திடும் தவமாள் வோர்க்கே
பாரினில் அவரே தோன்றும்,
படராது தவமில் லோர்க்கே'[2]
பாங்காக இதனைச் சொன்னார்;
நடத்திடும் வள்ளுவர்தான்:
நயமாகச் சொன்னார் அன்றோ? 249

அழகாக விசிட்டர் தானும்
அவமானத் தாக்கத் தாலே
பழகாத பகைணம் போல
பலபேசி இருந்தார் ஆங்கே.

---

1. திருவள்ளுவர் : திருக்குறள் : 27:1
2 ,, ,, : 27:2

வழவழ பேச்சு நீங்கி
*வல்லாங்கு வருதல் கண்டார்?
நிழலான நிலைமை நீங்கி
நேராக மோதல் ஆனார்! 250

முனிவரவர் அதைஎடுத்து உரைத்த போது,
மூவுலகும் அதிர்ச்சியுடன் கேட்ட தங்கே!
தனியான தவ முனிவர் வசிட்டர்! ஆனால்
தவமுண்டே! வரமுண்டே! தரணி எல்லாம்
பனிகட்டி உருகல்போல் கழிவ தற்குப்
பதைப்பினிலே ஆழ்ந்ததுவே! அங்கே யாரும்
நனிநல்ல சொல்லாட முயல ஒற்றார்!
நல்லபல சீடரெலாம் முனித லுற்றார்! 251

"கோனுக்கு இருகடமை உண்டு! ஒன்று
கோல்நிறுத்தல்; மற்றொன்று குடியைக் காத்தல்!
தேனுக்குள் கவிழ்ந்து விடும் ஈயைப் போல
தெருட்சியுடன் புல்லரெலாம் ஆட்சி தன்னைப்
பேனுக்குச் சமமாகச் செய்ய இங்கே
பலசெய்வர்! சமயங்கள் கூட செய்யும்!
மானுக்கு ஒளிந்துவிட இடமு முண்டு!
மக்கவுன்றோ? காவிகளை விடவா செய்வர்?" 252

'எச்சரிக்கை பல செய்தீர்! விந்தை! விந்தை!
என்நாடு! என்மக்கள்! என்றன் ஆட்சி!
மிச்சத்தை நான்போட்டால் எடுத்துக் கொள்ளும்!
மீதியினில் வாழ்கின்ற முனிவர் நீங்கள்!
அச்சத்தை அளித்துவிட முயலுகின்றீர்
ஆகாது! அதுநட்டம்! பசுவை தந்து
நச்சரிப்பு துடைத்திடுவீர்! நன்மை உண்டு!
நாடன்றோ? நானென்ன செய்வேன் சொல்வீர்'' 253

* வல்லாங்கே-சொற்போர்.

"'காற்றடித்தால் சிறுதூசி கண்ணில் பாயும்!
கண் எரியும்! இமைவந்து மூடும்! காக்கும்!
நாற்றுக்குப் பூச்சிவரும்; ஆனாலும்கூட
நல்எருதான் போட்டுவிட்டால் புழுவும் சாகும்!
வேற்றுமைகள் பலநாட்டில் வந்து சேர்ந்தால்
விருப்பமுடன் மன்னவன் கோலைச் சாய்த்து
ஆற்றிடவே வேண்டுமதை! இமையாய் அந்த
அழியாத எருவைப்போல் காக்க வேண்டும்!'' 254

"விண்ணதிலே மிகதூரம் பறக்கும் மந்த
விரிகிறகு பருந்தொன்று சுற்றும் பாரிப்பீர்!
கண்ணெதிரே அதுபறந்து பொருளைக் கொத்தும்!
கணக்காகப் பார்த்துவிடும்! கூர்மை பார்வை!
விண்காட்டும் மாமுனிவ! மன்னன்கூட
விரிசிறகு கழுகதுவே! பார்ப்பான் கூர்ந்து!
எண்ணத்தில் பட்டுவிட்டால் எழுந்து வந்து
எறிந்திடுவான் சட்டத்தை! காவல் அன்றோ? 255

"சிறுகல்லை குளம் ஒன்றில் போட்டு விட்டால்
சிற்றலைகள் பல எழும்பும்! நீரும் ஆடும்!
மறுகல்லே வேண்டாமே அலையும் நீரும்!
மலையோரம் சிலகாவி கல்லாய் ஆகி
விறுவிறுப்பாய் வீசிவிடும் குழப்பம் தன்னை!
விளையாட்டே! அதுகொல்லும் அமைதி தன்னை!
நறுக்கென்று அதைக்காண்பான் மன்னன்! நாலும்
நலந்தேட உமை கண்டேன்! கலக்கல் ஏனோ?" 256

விண்ஞான தவமுனிவர் உரைத்த போது
விசுவாவும் கோபமுடன் பேசி நின்றார்!
தண்மைமிகு மங்கையவள் அதனைக் கண்டு
தன்சிரத்தைத் தாழ்த்தியங்கே பார்த்திருந்தாள்!

கண்ணிமைகள் படபடக்க நடக்கு மந்த
    கால்வுடை—அரசியவின் பேரரைக் கண்டாள்!
எண்ணமெலாம் நடுநடுங்க பேச்சும் சாய்ந்து
    எதனையுமே பேசாமல் அமைதி யானாள். 257

"மீதிக்குக் காத்திருக்கும் முனிவர் கூட்டம்
    மேதியினில் நானல்ல! மிச்சம் தன்னை
ஆதியிலே விட்டொழுத்தேன்! மீச்சம் மீதி
    அவையெல்லாம் எனைஎன்ன செய்யும் சொல்வாய்?
பாதியிலே அரண்மனையில் நீ தான் வீழ்வாய்!
    படைமிரண்டு உன்மீதே சாடும்! என்னை
ஆதிவழி இறைவனவன் காப்பான்! நல்ல
    அமைதிமிகு தவமுண்டு! இறைமை அன்றோ?" 258

"முனிவர்க்கு நாடென்ன? நகர மென்ன?
    நச்சுமிகு பொருளென்ன? பதவி என்ன?
பனிகண்ணால் பெண் என்ன? பொருளும் என்ன?
    பார்முழுதும் புகழதுதான் என்ன? என்ன?
தனியான அரண்மனைதான் என்ன? அங்கே
    தனிச்சுகங்கள் போகங்கள் என்ன? தேங்கும்
கனியென்ன? மணப்பொருள்கள் என்ன? என்ன?
    கலையான ஏகபோக காமம் என்ன?" 259

"முனிவரெனில் யாரவர்கள்? அரசன் காட்டும்
    முழுபிச்சை ஏற்பவரா? இல்லை! இல்லை"
?யாகி, தலமாகி, ஞான மாகி,
    தாமாகி, அருளாகி, தகைமையாகி,
தனிமையிலே ஆன்மாவின் நெறியு மாகி
    தவிக்குமிந்த உடல்புண்ணைக் கலைத்தே என்றும்;
மனிதத்தைக் காப்பாற்றும் அறவோர் அன்றோ?
    மன்னரெலாம் அவர்கரத்தில் காய்கள்! காய்கள்!" 260

நெடுங்காட்டின் முனிவரவர் வெகுளல் ஆகி
    நெடும்பேச்சு பேசுவதில் மூழ்க லானார்!
அடுக்கடுக்காய் அங்கிருந்த படைஞர் சீடர்
    அது கண்டு ஆரவாரம் செய்து நின்றார்!
தடுப்பதற்கு வழியேதும் அறியா மங்கை
    தவித்திட்டாள்! போரதனை எண்ணி எண்ணி
நடுக்கத்தில் ஆழ்த்திடவே நினைவில் மாழ்கி
    நடைதளர்ந்து நின்றிருந்தாள்! பெண்மை அன்றோ? 261

"நன்றேதான் நீங்களவதைக் கூறி விட்டீர்!
    நானென்ன காய் என்றா நினைத்தீர்? இந்த
இன்பொழுகும் பெருநாட்டில் என்றன் வீச்சில்
    இருப்பதுதான் எல்லாமே! பார்ப்போம்! ஐய!
என்நாட்டு எல்லையிது! காடு! ஆனால்
    எழிலான காவற்கா டிதுவே ஆகும்!
என்நாட்டு அரண்களிலே இதும் ஒன்று!
    என் உரிமை இங்குண்டு! ஏசல் ஏனோ?" 262

"மன்னரெனில் நானும் தான் மன்னர் அன்றோ?
    மமதைமிகு பெருமன்னன் நீயே! ஆனால்
அன்பொழுகும் தவமன்னன் நானே! இங்கே
    அலைந்துவிடும் பொருளுக்குப் பொறுப்பு நானே!
என் ஆன்மா விண்வரையில் பாயும்! பாயும்!
    என்விழிகள் தேவர்களைக் கட்டும்! கட்டும்!
புன்மொழிகள் பேசுகிறாய்! கலைவாய் மன்னா!
    பொழுதெல்லாம் கழிந்ததுவே! செல்வாய்!
                                        செல்வாய்!" 263

"நாட்டுக்கு நல்நன்மை அளிக்கு மந்த
    நலமிக்க சபலாவை மீட்கா மல்நான்
நாட்டிற்குள் நுழைவதில்லை! உண்மை! ஐய
    நானிதனை இறுதியுடன் கேட்டு விட்டேன்!

நாட்டிற்கு நீங்களென்ன பகையா? அன்றி
நன்றியிலா முனிவரவர் வாழ்வும் வாழ்வா?
நாட்டிற்குள் நீங்கள் கான் நுழைவு செய்தால்
நானென்ன செய்வேனோ? சபலா வேண்டும்'' 264

செல்லென்ற முனிவருடன் முடிவாய் அங்கே
செருக்கோடு விசுவாவும் மோதல் செய்தார்.
எல்லோரும் அதுகண்டு செயலும் மாய்ந்து
ஏதேதோ செவிவழியாய்ப் பேச லானார்.
நல்லோரும், பல்லோரும் சூழ்ந்திருக்க
நாட்டெல்லை ஓரத்தில் பேச்சும் தோன்ற
மெல்லென்ற மங்கையவள் கலங்கி நிற்க
மேதினியே அதிர்ந்ததுவே! அறமே அன்றோ? 265

''நாளெல்லாம் பசுகேட்டு நிற்ப தாலே
நலமென்ன? கிடைக்காது உணர்வீர் ஐய!
தாளெல்லாம் பிடித்தாலும், வேண்டி னாலும்
தருகின்ற பசுவன்று! உலகில் என்றும்
மாளென்று சொன்னாலும் மாளா திங்கே
மகிழ்வோடு பெருவளத்தை அளித்து வாழும்!
கேடொன்று யாரோதான் சொன்ன தாலே
கேட்கின்றாய்! வீணேதான்!'' வசிட்டர்
சொன்னார்! 266

'கேட்பித்தல் இல்லை அது! கேட்டல் இல்லை!
கிடைக்காது எனச்சொல்ல உரிமை இல்லை!
வேட்கைமிகு அப்பசுவைக் கேட்டால் நின்று
விருப்பின்றி நீங்களதை மறுத்தல் செய்வீர்!
கூட்டுக்குள் வாழ்பறவை கூட இங்கே
குடிகளது சொந்தம்தான்! அறிய வேண்டும்!
வேட்டைக்குச் சென்றாலும் வேட்டை யாடும்
வேழத்தின் தந்தமது அரசின் சொத்தே! 267

"ஆழ்கடலின் உள்மூழ்கி அழகாய் உள்ள
அச்சங்கு பலஎடுத்து வந்த போதும
ஏழ்கடலின் உரிமையதும் மன்னர் கையின்!
என்கொடியின் புகழதுதான் யாவும் காண்பீர்!
ஆழ்ந்தெடுத்துக் குவித்தாலும் பொருள்கள் எல்லாம்
ஆட்சிமிகு அரசாங்கச் செல்வம் ஆகும்!
பாழ்பட்ட பேச்சொன்று வேண்டாம்! இன்றே
பண்போடு பசுவதனைச் செலுத்தி வைப்பீர்" 268

"வான்கரந்தால் நாடெல்லாம் வற்றிப் போடும்!
வயல்வற்றல் உணவதனைக் குறைத்துப் போடும்!
ஆன்வந்தான் அதனைத்தான் வெல்ல லாகும்!
அதற்குத்தான் கேட்டேன்நான்! விளம்பல் உற்றீர்:
தான்என்னும் அகந்தையிலே மடிந்தே போனீர்!
தாங்கேன்நான்! வீரர்களும் உள்ளம் இங்கே!
மான்போல பசுஓடி போனால் கூட
மாவீரர் பற்றிடுவர்! படையும் பற்றும்!" 269

"இன்றைக்கே இப்போதே பசுவை கொள்வேன்!
இழிபேச்சு வேண்டாமே! காப்பீர் சொற்கள்!
என்றைக்கும் என்ஆட்சி வெல்லும் காண்பீர்!
எடுத்துவிட்டால் வில்லதனை ஓய மாட்டேன்!
என்உடலில் உயிர்இருந்த குருதி சொட்டி
எயில்மண்ணில் வடியும்வரைப் போர்கும் செய்வேன்!
புன்உடலைக காணாது இறுதி கண்டு
புகழ்பெறுவேன்! வெல்லுதலே என்றன் கொள்கை!" 270

"மன்னர்களில் மாவீரன் நானே! என்னை
மாகாட்டில் சாபத்தால் அடக்கல் வேண்டாம்!
இன்பத்தைத் துன்பத்தைக் கண்டு கண்டு
இந்நாட்டை ஆண்டவன்நான்! அறியீர் தாங்கள்?

பண்முறையும் கமண்டலத்தைக் காட்டி, காட்டி
பலவாறு தவம்காட்டி நிற்கின் றீர்கள்!
வன்முறைகள் செங்கோலை வீழ்ந்தா திங்கே!
வழிமுறைகள் சமயத்தில் இல்லை போலும்!" 271

"வில்லுக்கு அம்பேற்று விட்டு, நாட்கள்
விரைவாக பலஆகி பறந்த திங்கே!
மல்லுக்கு அழைக்கின்றீர் தெய்வம் காட்டி!
மனிதர்க்குத் தெய்வமது உண்மை அன்றோ!
எல்லையிலாப் பேர்இறைவன் பெயரில் இங்கே
ஏதேதோ சாபங்கள் போடு கின்றீர்!
தொல்லைஅது நாட்டுக்கு நன்மை ஆற்ற
தூய்மைமிகு பசுவேண்டும்! உணர்வீர்" என்றார்! 272

சொற்கேட்ட வசிட்டருக்குக் கோபம் பொங்கிச்
சூழ்த்ததுவே விழிமுறைத்துப் பார்த்தார் அங்கே!
வற்புறுத்தும் அவர்சொல்லைக் கேட்ட போது,
வாழ்க்கையதை மாய்த்துவிட முயல லுற்றார்!
குற்றமிலாப் பசுவாலே ஆகி விட்ட,
கூடிவிடும் போரதனை உற்றுப் பார்த்தார்!
ஆற்றல்மிகு எழுச்சியொடு துள்ளி வந்து
ஆமங்கே முன்நின்றார்! முனிவர் கோனே! 273

"வாய்திறந்து மொழிபேசி நிற்கின் றாய்நீ!
வண்மையென கொடைகேட்டு அமர்கின் றாய்நீ"
தேய்திடுவாய் தீயினிலே நசுங்கிப் போவாய்!
திரண்டுவிடும் வரமெல்லாம் சாப மாக!
ஆய்கின்ற விண்ணவரே! வானம் வாழும்
ஆண்மைமிகு தேவர்களே! இறைவன் போற்றும்
மாய்வில்லா கடவுளின் அன்பர் ஆகி
மகிழ்கின்ற இறையோரே! வருக! வாழ்க" 274

"அறவோர்க்கு ஆற்றுகிற நீதி காண்பீர்!
அத்தனையும் என்மீது பழிகள்! போட்டார்!
நறவினிலே வீழ்ந்துவிடும் ஈக்கள் போல
நாநிலத்தில் அரசபோக மன்னர் எல்லாம்
அறவாழ்வை நசித்திடவே வந்து விட்டார்!
ஆகாது! இதுகொடுமை அடக்க வேண்டும்!
பறக்கின்ற பறவையதைப் பிடித்துக் கூட்டுள்
படைத்துவிடும் செயலிதுவே! வேண்டாம்!
வேண்டாம்!" 275

"அறவோர்கள் வாழ்ந்திருந்தால் நாடு வாழும்!
அறம்வாழ்ந்தால் தெய்வமது பேசும்! பேசும்!
திறமான தவம்பொங்கி வாழ்ந்து என்றும்
திரண்டுவிடும் தெய்வீகம் நாட்டில் எங்கும்!
வறண்டுவிட்ட ஆன்மாவின் ஒளியும் கூடும்!
வாழ்வினிலே பொய்வழக்கு ஒளிந்து போகும்!
மறவாழ்வும் மாய்ந்துவிடும்; அதனால் இங்கே
மகிழ்வோடு இருந்திடவே முயலல் செய்வீர்!" 276

நீண்டுவிட்ட கரமோடு வசிட்டர் தானும்
நீளமுடன் முழக்கத்தைச் செய்ய லானார்!
ஆண்டுவிடும் பெருமன்னன் கேட்டு நின்றான்!
அதுகண்டு மங்கையவள் திகைத்து நின்றாள்!
தோண்டுகிற ஊற்றுப்போல் வீரர் கூட்டம்
துள்ளிற்று! காஒலியும் செய்த தங்கே!
மாண்டுவிட முடிவெடுத்த கூட்டம் போல
மாமன்னர் படையங்கே ஆர்ந்த தங்கே! 277

"என்சொன்னீர்! முனிவர்க்கு ஏறே! தாங்கள்
எதைக்கண்டு இதுபோல பேசு கின்றீர்?
நன்றேதான் மிகநீங்கள் சொல்லி விட்டீர்!
நாடாளும் முறைநீங்கள் அறியீர் போதும்!

தின்பதற்குத் திராட்சையதை வைத்த போது
திருட்டுநரி குதித்தோடிப் புளிப்புக் கூறி
அன்றைக்கு ஓடுதல்போல், சமயம் கூறி
அடக்கினனை ஓடிடவே பார்த்தீர் ஐய!" 278

## நாடு

"நாடென்றால் என்ன அது? எண்ணம் கொள்வீர்!
நடமாடும் சிலகாவி இருந்து விட்டால்
காடென்றும், சோலைமலை என்றும், நாம்
கலைந்தொதுங்கி நடந்துவிட்டால் நாடும் ஆமா?
போடென்று சொன்னவுடன் வரங்கள் போடும்
பொருள்போடும் தவமெல்லாம் நாடும் ஆமா?
மாடென்று கூறிவிடின் கொதித்து வந்து
மடக்கிவிட துடிப்பதுதான் நாடும் ஆமா?" 279

"நாட்டிற்கு அளவிரண்டு! ஒன்று மக்கள்!
நலங்காணும் நல் ஆட்சி! இவற்றை என்றும்
கூட்டுகிற வழியினிலே செயலே வேண்டும்!
இலைந்துவிடும் அமைதியது இல்லை என்றால்!
வெட்கையிலே மிகஆழ்ந்து பக்தி மோகம்
விரைந்தெழுந்தால், தங்களைப்போல் யாரு மிங்கே
காட்டிடுவர் சாபத்தை! என்ன ஆடும்?
கலையாதா நல்ஆட்சி? இந்த நாட்டில்!" 280

"சமயங்கள் வளர்ந்துவரும்! இயற்கை! ஆனால்
சமயத்தில் பெருங்குப்பைச் சேரும் போது,
சமயமது பார்த்திருந்து மன்னர் எல்லாம்
சரியான பாடங்கள் காட்ட வேண்டும்!
தமத்பெரு வரமதனை வைத்துக் கொண்டு
தள்ளாட வைத்திடுவர் ஆட்சி பீடம்!
நமதென்று அவர்களெலாம் அரசை ஆக்கி
நாடிதனை விரல்நுனியில் ஆட வைப்பர்!" 281

"எத்தனையோ பெருமுனிவர் தோன்றி தோன்றி
எண்ணத்தை அரண்மனையில் நுழைத்து வைத்துச்
சத்தமுடன் சாபங்கள் காட்டி காட்டி
சரியவைக்க அரசாட்சி முயன்ற துண்டு!
தத்தமது கொள்கைகளை மன்னர் ஏற்க
தள்ளிவிட்டால் கரம்ஆட்டி, கண்ணை ஆட்டி
வித்தகங்கள் பலகாட்டி வித்தை காட்டி
விதிப்பதும்தான் பெருஞ்சாபம் உண்டே! உண்டே! 282

"கடவுளுக்கு பணிசெய்யும் சாயல் காட்டி
கடமைமிகு மன்னரையே கலைப்பர் அந்த
நடமாடும் மாமுனிவர்! வரலா றுண்டே!
நல்லவைகள் அரசர்க்கும் தெரியு மன்றோ?
படமாடும் ஈசன்பெயர் சொல்லிச் சொல்லிப்
பார்ஆளும் இறைவன்பெயர் கூறிக்கூறிக்
கடவுளையும் அடிமையென செய்வர்! அந்தக்
கல்லாக்கும் முனிவரெலாம்! அறிவீர் நீங்கள்!" 283

"ஓம்ரீம்ரீம் எனச்சொல்வர்; எறும்பாய்ப் போவார்!
'ஓகோரீம்' எனச்சொன்னால் எருதாய்ப் போவார்!
'ஆம்நீயும் கழுதை'யென சொல்லி விட்டால்
அடுத்தகணம் குட்டிச்சுவர் ஓரம் போவார்!

ஓம்ஓம்ஓ' எனச்சொன்னால் கல்லாய் ஆவார்!
'ஓடோடி போநீதான்' என்றே சொன்னால்
ஆம்மனிதர் அலைவார்கள் மிருக மாக!
அத்தனையும் கடவுள்பெயர் காட்சி தானே!" 284

"என்பெயர்தான் மித்திரரே! அதனை எல்லாம்
எப்போதும் ஆதரிக்க மாட்டேன்! மாட்டேன்!
தன்பொருட்டுச் சாபவினை யாட்டு ஆடித்
தன்ஆற்றல் காட்டுகிறார் முனிவர் எல்லாம்!
இன்றைக்கே சாபத்தைக் காணு கின்றேன்!
இதுநாடு! மக்களெலாம் வாழும் நாடு!
என்றைக்கும் சமயத்துச் சாப மெல்லாம்
எடுக்காது ஆற்றலினை மக்கள் அன்றோ?" 285

"நாட்டிற்குப் பெருந்தலைவன் மன்னன் வந்தார்;
நாநீட்டி இப்பசுவைக் கேட்டு நின்றார்!
காட்டிற்குள் கலகங்கள் ஆக்க வந்தார்!
காவலினை என்மீது திணிக்க வந்தார்!
வீட்டிற்குள் பசு அடைக்க வந்து நின்றார்!
வீரத்தைச் சட்டத்தால் காட்டு கின்றார்!
வாட்டுகிற மொழியெல்லாம் பேசு கின்றார்!
வளமளிக்கும் தன்மையென பேசுகின்றார்!" 286

"மன்னவரே! வேண்டாமே பேச்சு இன்னும்;
விரைவாகச் சென்றிடுவீர்! இறைவர் தோன்றி
என்றைக்கும் பெருந்துயரம் அளிப்பர் கண்பாய்!
எடுத்துசொன்னேன்! அகன்றிடுவீர்! இன்றே இங்கே!
மென்கரங்கள் வளைந்துவிட்டால், விண்ணும் அங்கே
மென்மையினில் வீழ்ந்துவிடும்! பிளக்கும் காண்பாய்!
என்கரத்தில் சாபங்கள் உண்டு! என்றும்
எழுச்சிமிகு துறவியிடம் துள்ளல் வேண்டாம்!" 287

இன்னுமங்கே வசிட்டர்மொழி கூற லானார்!
இதுஎன்று முடிந்திடுமோ என்றே நாளும்
அன்றைக்கு அங்கிருந்தோ துயரில் மூழ்க
அத்தனைப்பேர் அருகிருந்து பெயர்தல் ஆனார்!
தன்வில்லை சிலவீரர் எடுக்க லுற்றார்!
தன் அம்பை சிலவீரர் தேட லானார்!
தன்வாளை சிலபேர்கள் தாங்க லானார்!
தன்ஈட்டி சிலபேரும் உயர்த்த லானார்! 288

'என்னஇது! மாமுனிவ! வசிட்டர் கோனே!
வளவளத்து மொழிகளதை நீட்டு கின்றாய்!
என்வாளை என் அம்பை எடுத்தேன்! நானும்
என் அரசை நிலைநாட்ட முடிவு செய்தேன்!
உன்சாபம், உன்வரத்தை சொல்வேன் இன்றே!
உயிரெனக்கு வெறும்மண்ணே! துணிந்தேன்! நின்றேன்!
இன்றைக்கே உனைகொல்வேன்! இல்லை என்றால்
இந்தஇடம் பிணத்தோலின் இடமே ஆகும். 289

## போர்

''வீரர்களே! படைஞர்களே! பாய்வீர்! பாய்வீர்!
விளம்புகிற முனிவர்க்குப் பாடம் சொல்வீர்!
ஆரவாரம் மிகசெய்து அலசுகின்றார்!
அடிமையல! நாமெல்லாம்! ஆட்சி யுண்டு!
தாரணிந்த வீரர்களே! பசுவைத் தேடித்
தரதரவென இழுத்திங்கே கட்டி வைத்துக்
காரணமும் சிறிதின்றி இழுத்துச் செல்வீர்!
காட்டுகிறேன் வசிட்டருக்கு! விசுவா நானே! 290

மித்திரரும் பொங்கிடவே 'ஓகோ' வென்று
 மிகையாகி வீரரெலாம் ஆர்ப்ப ரித்தார்!
நத்திவரும் சபலாதான் ஓடிற் றங்கே!
 நடத்திவர சிலவீரர் அதன்பின் ஓடி
பத்திரமாய்ப் பிடிபோட்டார்! சிலரோ அங்கே
 பகைவர்களைச் சிட்டெரிக்க முனைதலானார்!
இத்தரையே அதிர்ச்சியுடன் கலைந்த தங்கே!
 இதுஎன்ன? தவம் அரசர் போரே அன்றோ? 291

"இந்தபசு பிடித்துவிட்டால் விண்ணும் அங்கே
 இருபிளவாய் பிளந்துவிடும்! காண்பீர் நீங்கள்;
அந்ததிரு பசுவிங்குத் துன்பம் நேர்ந்தால்
 அத்தனையும் சிதறிவிடும் அறிவீர்! நீங்கள்!
எந்தஒரு துன்பம்அது வந்து சேர்ந்தால்,
 எல்லாமே மண்ணாகும்! சபிப்பேன் ஒன்றே!
இந்தகணம் அதைவிடுங்கள்! கேட்பீர் பேச்சு!
 விரைந்துவரும் 'வரமதுதான்!' வசிட்டர் என்றார்! 292

அதற்குள்ளே படைவீரர் பாய்ந்தே விட்டார்!
 அப்பசுவைக் கரத்தாலே பிடிக்க லானார்;
விதவிதமாய் ஆயுதங்கள் நீட்டி நீட்டி
 விரைவாக அதைப்பற்ற முயல லானார்!
மதர்த்தங்கே சபலாவும் துள்ளி துள்ளி
 மடிந்தோடி பாய்ந்ததுவே! தூரம் தூரம்
பதமாக பலபேரை இழுத்துச் சென்று
 பலகாதம் ஓடிற்று! மயக்கம் எங்கும்! 293

நீள்கொம்பை நீட்டியது; வாலே வீரம்
 நிரம்பியங்கே சுழற்றியது! விழியை எல்லாம்
நீள்பார்வை தனையோட்டிக் கலைந்த தங்கே!
 நிற்போரை தலைசாய்க்க வைத்த தங்கே!

மாள்கின்ற மனிதர்களைக் காலின் கீழே
    மணலதிலே தள்ளிவிட்டுக் கடந்த தங்கே!
ஆள்ஒருவர் அதைப்பிடிக்க முயன்று நின்று
    அடிசறுக்கி வீழ்ந்திட்டார்! துன்பம்! துன்பம்! 294

கொல்கொம்பை ஒருவீரன் பிடிசக லானான்;
    கோடுயர்ந்த முதுகதனை ஒருவன் கொண்டான்!
நல்கயிற்றை மூக்குவழி ஒருவன் பற்றி
    நன்றாக வால்பற்றிச் சளைத்துக் கொண்டான்!
எல்லோரும் அதனமேலே விழுதல் செய்து
    எடுத்தனின் கழுத்தோரக் கயிற்றைப் பற்றி
நில்லாமல் இழுத்திடவே அதுவும் அங்கே
    நிலையற்றுப் போராட்டம் செய்த தங்கே! 295

கால்குலைய கழுத்தெல்லாம் வளைந்தே ஆட,
    களையிழந்த முகத்தோடு துயரில் மூழ்க,
வால்மடங்கி நிலையற்று, மலைப்பில் ஆழ,
    வாய்பிரிந்து கதறிவிட, கலக்கம் காண,
வேல்ஒன்று சிறிதேதான் முனைவில் தேங்க
    வெந்துவிடும் துன்பங்கள் நினைவில் தேங்க
கோல்ஒன்று குளறிவிட, குமைந்தே போக,
    குவிந்துவிட இயலாது தவித்த தங்கே! 296

'பிடி' என்றார் சிலவீரர்; 'விரட்டு' என்றார்!
    'பீடதனைக் கலை' என்றார் சிலபேர் அங்கே!
தடிநீட்டி 'ஆடென்றார்' சிலரும் சேர்ந்து!
    'தாவலையே தடுத்துவிடு' என்றார்; 'ஓடல்
கடிதாரும் காவலிடு; என்றார். 'கட்டி
    காடிதனில் இழுத்திடுவீர்! என்று சொன்னார்!
அடிபட்டு அல்லலிலே ஆழ்த்தி ருந்து
    அதுகசிந்து உருகிற்று! பசுவே அன்றோ! 297

''வீரர்களே! அதுதுள்ளும் பற்றி பற்றி
விரைவாக அரண்மனைக்கு எடுத்துச் செல்வீர்''
ஆரவார ஓசையிடும் படைகுருக்கு
அங்கேதான் மித்திரரும் சட்டம் போட்டார்!
''நரகமது கிடைத்துவிடும்! விசிட்டர் சொன்னேன்!
நகருங்கள்! தெய்வபசு! துன்பம் வேண்டாம்''
கரகரத்த குரலினிலே கோபத் தோடு
கடிதாக வசிட்டருந்தான் பேச லானார். 298

''எனதருமை சீடர்களே! பொறுமை போதும்!
எத்தரெலாம் பசுபற்றி சிதைக்கின் றார்கள்!
மனதளவில் தூய்மைமிகு பசுவை இங்கே
மண்மீதில் துயர்செய்தார்! பொங்கிப் பாய்ந்து,
தினவெடுத்த தோள்களதுக்குப் போரும் காட்டித்
திரண்டிடுவீர்! திகைப்பெல்லாம் போதும்! போதும்!
கனவினிலே கூடத்தான் பசுவை நாமே
கயமையுடன் துன்புறுத்தக் கூடா தையா!'' 299

''வேல்நீட்டி வம்பளத்தால் வரத்தைக் காட்டி
வளைத்திடுவீர் கோலதனை; கூர்மைதன்னை
தோல்மீது நெருப்புவரம் நீட்டிச் சேர்த்துக்
தொலைத்திடுவீர்! தோள்களினை, விரட்டி ஓட்ட
கோல்வரத்தைச் சபித்திடுவீர்! அவற்றின் வேகம்
கொழுந்துவிடும்! காற்றினிலே பறந்து சென்று
வேல் ஒடிக்கும்! மந்திரங்கள் போட்டு வைப்பீர்!
வசிட்டர்நான்! பிரம்மரிஷி! வெல்வேன்!
வெல்வேன்!'' 300

ஆர்ப்பரித்து வசிட்டர்தான் முழங்கி அங்கே
'ஆகாகா ஓம் ரீம் ரீம் ஈச' என்றார்
ஆர்த்தெழுந்து சரம்சரமாய் அம்பு ஓடி
அடிகொடுக்க முயன்றதுவே! சீடர் எல்லாம்

வேர்அற்ற மரம்போல மன்னர் சார்ந்த
வீரர்களை விழவைத்தார் மந்திரத்தால்!
ஆர்க்கின்ற படைவீரர் அலறி கத்தி
அடிசறுக்கி உருண்டிட்டார்! ஓலம்! ஓலம்! 301

வேல்பறக்க, அம்பெல்லாம் பறக்க, விண்ணில்,
விரைவாகத் தேவரெலாம் பறக்க, எங்கும்
ஆல்விழுதாய் வீரரெலாம் ஊசல் ஆட்டம்
ஆழ்ந்திருந்து அசைந்தாடி பறக்க, ஆங்கே
கால்முறிந்து, கைமுறிந்து, தலைமு றிந்து
கழுத்தெல்லாம் வளைந்துடனே முறிந்து தேங்கி
கோல்பற்றி முடியாமல் குலைந்து வீழ்ந்தார்!
கொண்டாட்டம் சீடர்க்கு! மகிழ்ச்சி வெள்ளம்! 302

ஆனாலும் சபலாவை விட்டா ரில்லை.
அழுத்தமுடன் அதைக்கோர்த்துக் கயிற்றில் கட்டிக்
கானாற்று ஓரத்தில் வளைக்கச் சென்றார்!
கலங்கிற்று மிகஅதிகம்! கண்ணீர் வார்த்துக்
கோனாற்றும் கொடுமையினைக் கண்டு கண்டு
குலைந்திடவே மாழ்கிற்று! விசிறி வீசி
கானாற்று ஓரத்தில் வீரர் தம்மைக்
கலைத்தோட முயன்றதுவே! பசுவும் அங்கே! 303

நிலைபோக, நடைதளர்ந்து விழியும் சோர,
நீங்காத வீரர்களின் துன்பம் சேர,
அலைஅலையாய் அவரெல்லாம் அலைத்துக் கட்ட
ஆங்காங்கே பலவீரர் ஓடி ஓடி
நிலையற்றுத் துரத்திவர, ஓடல் மாழ்கி
நேர்வழிகள் சிலவிட்டு அசைந்து ஆடி
சிலையாகி நின்றதுதான் திகைத்த தங்கே!
சிந்தனையும் பலசெய்து கழிந்த தங்கே! 304

'இவர்கள்தான் ஏன்என்னை பற்றி பற்றி
இழுக்கின்றார்; வளைக்கின்றார்? கட்டுகின்றார்!
அவமானம் செய்கின்றார்; அவல காட்சி!
அடிஎல்லாம் நொந்துவிட அடிக்கின் றார்கள்?
தவமுண்டே! வரமுண்டே! தெய்வ முண்டே!
தந்துவிட பொருளெல்லாம் உண்டே! உண்டே!
கவலைக்கு வித்திட்டுக் கொடுமை செய்தார்!
காட்சிக்கு இழுக்கிறது! என்னே! என்னே! 305

உள்ளத்தில் பலஎண்ணி பசுவும் அங்கே
உளைச்சலிலே ஆழ்ந்திடவே கலங்கிற் றங்கே!
தள்ளிவிட முயன்றாலும் முடியா தங்கே!
தத்தளித்து அவசரத்திய் அலைந்த தங்கே்
கள்ளமிகு வீரர்க்கு பாடம் காட்ட
கல்மீது ஏறிவிட முயன்ற தங்கே!
பள்ளத்தில் சிலபேரைத் தள்ளிற் றங்கே!
பதைத்தார்கள் வீரரெலாம் காட்டில் நின்று! 30 6

ஈட்டியொன்று சற்றேதான் மேலே பாய
இழுத்தவரைப் போட்டுவிட முயன்ற தங்கே!
காட்டுகிற பேர்தங்கே ஆயு தங்கள்
கண்மூடி மோதிற்று! அச்சமின்றி!
வாட்டிவிடும் அவர்களினைச் சேர்த்துச் சேர்த்து
வகையாக விளையாடிச் சாய்ந்து ஓட்ட
கோட்டினிலே உருள்கின்ற பொருளே போல
குலைத்துடனே நிமிர்ந்திடவே முயன்ற தங்கே! 307

கணப்போதில் அவர்களைத்தான் அசைத்து விட்டுக்
கடிதாகப் பறந்தோடி வசிட்டர் பாதம்
வணங்கிற்று! நின்றங்கே அழுகை செய்து
வளைத்தாட்டிக் கொம்புதனை கண்ணீர் சிந்தி

மணக்கின்ற தெய்வீக மணத்தை வீசி
மண்டியிட்டுக் கதறியது! கடைக்கண் ஓரம்
வணக்கமிகு கண்ணீரும் உருகிற் றங்கே!
வாய்திறந்து பேசிற்று! தெய்வ மன்றோ? 308

"இவரெல்லாம் எனைப்பிடித்தார்; என்ன செய்வேன்?
இப்படியா கொடுமைகளைச் செய்வர்? எங்கும்
தவறேதும் செய்யவில்லை! ஆனால் கூட
தள்ளாட்டம் அளிக்கின்றார்! நாட்டிற் குள்ளே
கவர்ந்தெடுத்து இருக்கின்றார்! என்னே இந்தக்
களவுமிகு செயல்பாடு! இதுவும் இங்கே
கவல்கின்ற செயலன்றோ? துயரே அன்றே?
கடவுளென நீங்களெனைக் காக்க வேண்டும்." 309

"இழுக்கின்றார்; முறிக்கின்றார்; அலைச்சல் காட்டி
இடிக்கின்றார்; மடிக்கின்றார்; இகழ்ச்சி செய்து
கழுகாகி குத்துகின்றார் கண்ணீர் சோர
காவலிலே வடிகின்றார்; நெஞ்சம் நோகத்
தழுதழுக்க வளைக்கின்றார்; வஞ்சம் செய்து
தலைபிடித்துக் குலைக்கின்றார்! என்னே! என்னே!
விழுகின்ற அடியெல்லாம் தவத்தின் மீது
விண்இறைவன் மீதேதான் விழுந்தான் அன்றோ?" 301

அடிதாங்க முடியாமல் சபலா தானும்
அமைதியினை இழந்தங்கே அலறி ஓய்ந்து
வடிந்தோடும் கண்ணீரில் நனைத்து நின்று
வாடியது! வழிந்ததுவே! கலக்கம் கண்டு
படிந்துவிட வழியேதும் அறியா தங்கே
பரவியது மண்மீதில் மெள்ள மெள்ள!
கொடியாகி உருளல்போல் சபலா தானும்
குமைந்துடனே சரிந்ததுவே! வசிட்டர் பார்த்தார்! 311

'பலஆண்டு தவம்செய்து, பகைமை வென்று,
பலநதிகள் ஓரத்தில் யாகம் செய்து,
விலக்கிபல அழிவளிக்கும் விதிகள் தம்மை
விண்ணோக்கி மூச்சடக்கி, விழிகள் மூடி
நலங்காத்து, நாட்டினையே துறந்து விட்டு,
நடுகாட்டில் புலிஓசை கேட்டு கேட்டுக்
கலக்கமிலா தவபசுவை பெற்றேன்; என்னே!
கயமை இது! தவறிதுவே!' வசிட்டர் எண்ணி, 312

"நல்பசுவே! இன் பசுவே! இறைவன் தந்த
நாடிதுவும் போற்றுமுனே! நீயே பொங்கு!
எல்லொரும் உனைக்கண்டு திகைக்க அங்கே
எடுத்துவிடு உன்உருவம்; விரட்டி ஓட்டு
கல்லாத கடைவீரர் உன்மேல் பாய்ந்தார்!
கல்லாக்கு! சாபத்தை நீட்டி நின்று
இல்லாமல் அவர் ஆற்றல் செய்வாய் இன்றே!
இதுவீடு! முனிவர்களின் தெய்வ வீடு!" 313

தன்நாவால் வசிட்டருந்தான் கூறி விட்டுத்
தன்னுடைய யோகத்தைச் சாபம் தன்னை
இன்பமிலா கொடுவாங்கள் மொத்த மாக
இதில்ஆற்ற பயன்படுத்த முயல லானார்!
தன்ஆட்சி தவஆட்சி வெல்ல வெல்ல
தன்வரங்கள் தன்சாபம் வெல்ல வெல்ல
அன்றவரும் விரல்அசைத்து மெல்ல மெல்ல
அசைத்திட்டார் வசிட்டருந்தான் மெள்ள மெள்ள! 314

பொங்கிட்ட சாபங்கள் பாய்ந்து பாய்ந்து
பொழுதெல்லாம் காடதனில் செல்லச் செல்ல
அங்கிருந்த வீரர்கள், சீடர் கூட்டம்,
அடங்காது போராட, அதிர்ந்த காடு,

தங்குகிற நிலையின்றி மலைத்த தங்கே!
தர்மார்க மீறிவிட்ட சபலர் கூட
எங்கிருந்தோ ஆத்திரமும் பெற்றுக் கொண்டு
எடுத்ததுவே பெரும்போரை! குழப்பம் கூச்சல்! 315

சரம்எடுத்தார்; கரம்எடுத்தார்; அம்பை அள்ளிச்
சரியாக மார்பினிலே துளையும் போட்டார்!
பரமனவன் விண்கதவைத் திறந்து வைத்துப்
பறக்கின்ற அம்(பு)ஈட்டி அவற்றைப் பார்த்துத்
'திரண்டதுவா பெரும்போரும்! வசிட்டர் அங்கே
திரண்டெழுந்தார்! விண்அதிரும்! மண்ணும் கூட
நரகமென நிறைந்துவிடும்! என்னே இந்த
நாசமிகு பெரும்போரே! எனவி யந்தார்! 316

வாளெடுத்தார்; வலைவிரித்தார்; கேட யத்தை
வளர்மார்பில் தான்சேர்த்தார்! ஈட்டி தன்னை
மானெனவே குறிபார்த்து எய்துவைத்தார்;
மாண்டனரே அனைவரும்தான் களத்தில் அங்கே!
தானென்று சிலர்சொல்ல தானே கண்டு
தன்சரத்தால் அடித்திட்டார்! பகைவர் வீழ்ந்தார்!
கோவென்று சிலர்சொல்ல, விண்ணின் கோஷம்
குவிந்ததுவே! பயத்தோடு! இருளே வானில்! 317

பசு அங்கே கட்டவிலே மீறி மீறிக்
கடைந்தெடுத்து அனைவரையும் சாடிற் றங்கே!
பசுவானில் எதிரொலிக்க, இறைவர் கூடப்
பலவாறு அதுகண்டு மாய்ந்திருந்தார்!
பசுவுக்குத் தெய்வீகம் வந்த தாலே
பறந்துசென்று; பலவீரர் மடிய சுற்றி
அசுரர்களை அழித்திட்ட இறைவன் போல
அடக்கிவிட முயன்றதுவே! வேகம்! வீரம்! 319

காட்டினிலே பலமிருகம் கதறிற் றங்கே!
காட்டோரம் யானைகளும் பிளிறிற றங்கே!
மாட்டுக்குத் தீங்கென அனைத்தும்கூடி
மனத்தாங்கல் பலகொண்டு கத்திற் றங்கே!
கூட்டுக்குள் சிலபறவை கிறீச்சென் றங்கே
கூடியொரு கூச்சலினைப் போட்ட தங்கே!
பாட்டுண்டு! பறவையினப் பாட்டே, ஆனால்
பதைப்பதனில் இருந்ததுவே! துன்பம்! துன்பம்! 319

அந்தபெரு ஓசையினைக் கேட்ட தாலே
அடித்ததுவே பெருங்காற்று! அலசல் காற்று!
விந்தைமிகு மந்திரத்தை வசிட்டர், போட்டார்!
விண்ணெல்லாம் பொங்கியது சூறைக் காற்று!
சிந்தையிலே வீரத்தைப் பெற்று, சீடர்
சீறிஎழ அக்காற்றில், படைகள் கொண்ட
வெந்தபுண்ணை ஆக்கிவிடும் ஆயு தங்கள்,
விரைவாகப் பறந்ததுவே! பயனே இன்றி! 320

விண்சிதற மண்சிதற, மரத்தில் ஓலம்
விரைவாகச் சிதறிவிட, பறவை கத்த
அண்மையில் மயில்கூவ, மந்தி கூவ,
ஆடிவரும் நீர்அலைகள் கூவ கூவத்,
தண்மைக்கு மலர்கூட்டம் சிதற, சிந்தி
தரைமீதில் பதறிவிழ, பதைத்துவிழ,
எண்ணத்தில் துயர்கொண்டார் சீடர்; அங்கே
எடுத்தாட்டி படைவீரர் அம்பை போட்டார்! 321

கூர்அம்பு முகம்குத்த மார்பில் குத்த
கூம்பிவிடும் துடைமீதில் குத்தி நிற்க,
ஆர்வமுடன் ஈட்டிகளே வயிற்றில் பாய்ந்து
வாய்அகல குழிபறிக்க, குடல்கள் வீங்க

தேர்ஏறி நின்றிட்ட வீரர் எல்லாம்,
திகைப்போடு வாளெறிய கரத்தை வெட்ட
பார்வையதைச் செங்குருதி வழிந்து பொங்கி
பட்டென்று மறைத்துவிட வீரர் மாண்டார்! 322

வலிதாங்க முடியாமல் வீரர் கூட்டம்
வளைந்தொதுங்கி தூரத்தில் ஓட ஓட,
கலிவந்து காட்டினிலே நுழைந்தாற் போலக்
கலக்கத்தால் அனைவருமே வாட வாட,
பலியாகி பலபேர்கள் வீழ்ந்து ருண்டு
பழமைமிகு உயிர்தனைத் தேட தேட
மலிந்துவிட்ட பேரதனைத் தடுத்தல் இன்றி
மலைத்தார்கள் அனைவருமே! ஓசை ஓசை! 323

வழிந்துவிட்ட செங்குருதி மண்ணில் பாய்ந்து
வழிசெய்து ஆறாகி உடல் தன்னைக்
கழியாத கரையாக்கி நிணத்தை யெல்லாம்
கலைந்தொதுங்கும் நுரையாகப் பெற்றுக்கொண்டு,
இழிவான இறப்பதனால் சாய்ந்து விட்ட
இருக்கின்ற தலையோட்டம் பலவும் பெற்று,
குழிதோறும் அலைபரப்பி ஓடிற் றங்கே!
கும்பிட்ட கரம்போரில் ஒடிந்த தங்கே! 324

சிலநரிகள் சந்தினிலே நுழைந்து வந்து
சிலதலைகள் எடுத்திடவே முயன்ற தங்கே!
பலகரங்கள் துண்டித்து விழுந்த தாலே,
பலகழுகு பறந்துவந்து இறங்கிற் றங்கே!
கலகத்தில் மோதலினால் குடல்கள் சாய
காத்திருந்த புலியொன்று பாய்ந்த தங்கே!
பலவான பிணம்சாய்ந்து குவிந்த தாலே
பார்அதிர்ந்து, கலங்கிற்று! நாட்டுப் போரே! 325

வால்பிடித்த ஒருவீரன் சுழற்றும்போது,
வாயோரம் அதுதடவ குருதி பொங்கி
மாள்வதுபோல் வாய்கிழிந்து கொட்டிற் றங்கே!
மடிந்துவிழ கீழுருண்டார் குருதி தன்னில்!
தோள்படவே இன்னும்சிலர் துவண்டு வீழ்ந்தார்!
தொகையாகி எல்லாமே தோய்ந்து நின்று
தூள்தூளாய்ச் சிதறிற்று! சிதறல் எங்கும்
தோளினிலே குருதிவடு தோயும்! ஆழும்! 325

சுயவரெலாம் தனைபிடிக்க வந்து நின்று
கரம்நீட்டி கரம்காட்டி வளைத்தபோது,
பயங்கொண்டு பதறியது, சுழலல் ஆகி,
பாய்ச்சலிலே ஓடிற்று! உருண்டார் வீரர்!
மயக்கத்தில் அவரெல்லாம் பின்னால் வந்து
மடமடவென பிடிபோட மீண்டும் அங்கே
தயக்கமுடன் முயலுகையில், சபலா தானும்
தடுத்தலது இல்லாமல் ஓடிற் றங்கே! 326

கால்களிலே சிலபேர்கள் சிக்கி னார்கள்!
கலைகொம்பில் சிலபேர்கள் சுற்றினார்கள்.
வால்பிடித்த சிலபேர்கள் வழுக்கி னார்கள்!
வயிறாய்ந்த சிலபேர்கள் கலங்கி னார்கள்!
வேல்பற்றி வளைத்திட்ட போது அங்கே
வியப்பாகி சிலபேர்கள் மழுங்கி னார்கள்!
மேல்விழுந்த சிலபேர்கள் மரத்தில் மோதி
மண்தரையில் கவிழ்ந்தார்கள்! தெய்வம் அன்றோ? 327

உடல் அசைந்து குலுங்கியதில், பலரும் சோர்ந்து
உதைபட்டுச் சரிந்தார்கள்! உலர்ந்த அந்த
படல்ஆன சலுகிலையாய் தூரம் சென்று
பறந்தார்கள் சிலவீரர்! அடித்த போது
கடல்ஏதும் பனங்கலுக்காய் வாலும் சாட
மடிந்தார்கள் சிலபேர்கள்! வாயில் கையில்
அடல்செய்து ஆர்ந்ததினால் புண்கள் பட்டு
அலறிபுடைத் தவரெல்லாம் பதைத்திட் டார்கள்! 330

என்னவென அறியாத வசிட்டர் மெள்ள
ஏறெடுத்துப் பார்த்திட்டார்! சபலா அங்கே
தன்னுடைய சிற்றுடலே அசைத்துக் கொண்டே
சிந்தனையில் வேகமுடன் ஓடல் செய்ய
பின்னிவிட்ட வேலோடு பின்னால் ஓடி,
பிடிதன்னில் வளைத்தாட்ட அவர்கள் ஓங்க
தன்னுடைய கரம்காட்டி மந்த ரித்தார்!
தாவியதே பெருஞ்சக்தி! சபலா மீது! 331

ஓடியஅப் பசுஅங்கே நின்ற போது
ஓடிந்திட்டார் வீரரெலாம்! வீழ்ந்தே போனார்!
ஆடிவிட்ட பலவீரர் அடங்கிப் போனார்!
அலசிவிட்ட வாள்வீரர் அசந்தே போனார்!
தேடிவிட்ட சிலபேரும் தெருட்சி யுற்றார்!
தெரிந்துவிட்ட இன்னும்பலர் திகைப்பில் ஆழ்ந்தார்!
நாடிவிட்ட சபலாவும் கத்திற் றங்கே!
நடுங்கிற்று படைஎல்லாம், பதுக்கல் கண்டு! 332

ஊங்காரம் செய்ததீது! ஊரைக் காட்டி
உருட்டிற்று! ஊதுகுழல் சத்தம் போட்டு,
ஆங்காரம் காட்டிற்று! அடக்கம் நீங்க
ஆடிற்று! துள்ளிற்று! பாய்ந்தோ டிற்று!

வேங்கானம் கேட்டுவிட்ட பாம்பே போல
விளங்கிற்று! சிறிற்று! ஆங்கோர் படிற்று!
தாங்காத இஞ்ஞாலம் தவிப்பில் ஆழ்ந்து
தள்ளாட்டம் அடைந்ததுவே! சவலாய் அன்றோ!

வரமாட வழியாட, விரிசை ஆட,
வளமாட, படைஆட, பரிசும் ஆட,
காயாட, கலைஆட, கலக்கம் ஆட,
காலாட, வில்லாட, அம்பும் ஆட,
மரமாட, வீடாட, விசையும் ஆட,
மண்ணாட, விண்ணாட, மக்கள் ஆட
குரலாட, கல்லாட, சிடர் ஆட,
குவிந்தாட சேர்ந்ததுவே பிணத்தின் வாடை! 334

பிணமேடை அங்கொன்று தோன்றி நின்று
பிறந்துவிட்ட போர்க்குரலின் இடமாய் ஆகி
நிணவாடை வீசிடவே நிரம்பிற் றங்கே!
நீங்காத எலும்புகளும் புரண்ட தங்கே!
கணங்கணமும் வீரர்கள்தான் விழுந்த தாலே,
கல்மலையாய்ப் பிணமலைகள் குவிந்த தங்கே!
மணம்வீச, பிணமலையாய் மாறிற் றங்கே!
மங்கையவள் நடுநடுங்கி ஓரம் நின்றாள்! 335

ஓர்வீரன் ஈட்டியினை எடுத்த போது,
ஓங்காரக் கூச்சலுடன் பாய்ந்தான் அங்கே!
தேர்முறிய, சக்கரங்கள் முறிய, தானும்
திகைப்போடு மண்மீது சாய்ந்து போனான்!
ஏர்பிடித்த கரத்தினிலே ஈட்டி கொண்டு
எடுபிடியாய் வீழ்ந்தவன்மேல் ஒருவன் வீழ்ந்தான்!
பேரோசை எழும்பிற்று! பிணவாய் தோறும்
பெருக்கெடுத்துக் குருதியது ஓடிற் றங்கே! 336

வீரமிகு முகமெல்லாம் செம்மை பூச்சே!
விரல்நுனிகள் மண்ணதிலே சிதறல் ஆகி
தேரதுவும் தலைகீழாய்க் கவிழ்தல் பெற்றுத்
தகர்ந்ததுவே! சிறுசில்லி கூட்ட மாக!
வாரறுந்து குதிரைகளின் கழுத்தின் ஓரம்
வளர்அம்பு பாய்ந்ததினால், வழிய ஓடித்
தாரலுந்த வீரர்களும் தளர்ந்தே போனார்!
தாங்குமாஇவ் உலகமிது? சபலா போரே! 337

முட்டியது, மோதியது; குதறிற் றங்கே!
முண்டெழுந்து திணறிற்று! தியா யிற்று!
ஆட்டியது! அலறலிலே வீரர் தம்மை
ஆழ்த்தியது! அசைவினிலே ஆயு தங்கள்
காட்டியது! காவியதன் வேகம் தன்னைக்
கலக்கியது! கண்சோர கலங்கும் அந்தக்
கோட்டியல்பு மிக்கபல யானை தம்மைக்
குத்தியது! தெய்வீகம் கொதிக்கும் அன்றோ? 338

எத்தனையோ பேர்அங்கே சுருண்டார்! வீழ்ந்தார்!
எப்படியோ பலபேரும் மருண்டார்! மாய்ந்தார்!
சத்தத்தின் முனையினிலே சரிந்தார்! சாய்ந்தார்!
சரித்திரத்தைப் படைத்திடவே சதிரில் நின்றார்!
குத்தலிலே ஈட்டிமுனைக் குருதி நீரில்
குளித்ததுவே! பாய்ச்சலிலே அம்புக் கூட்டம்
நித்தமும்தான் உடலினிலே குத்தி நின்று
நிட்டையிலே நிலைத்ததுவே! கொடுமை போரே! 339

"நல்பசுவே! சவலாவே! வீரர் எல்லாம்
நாட்டினிலே மிகஉள்ளார்! சீடர் சேர்ந்து
கல்லாக்க, கழிவிரக்கம் தன்னில் மூட,
கடைசியிலே மித்திரரை வீழ்த்தி கட்ட,

இல்லாமல் அவர்பெருமை செய்ய இன்றே
இப்பொழுதே படைசேர்ப்பாய்! வெல்வாய்!
அல்லாது போனாலோ அவர்கள் உன்னை
ஆழ்த்திடுவர்! துன்பத்தில்'' வசிட்டார் சொன்னார்! 340

"சபலாவும் அதுகேட்டு இறைவன் பேரை
சாத்திரத்து வழிமுறையில் உரைத்த தங்கே!
சபலாவின் வேண்டுதலைக் கேட்ட போது,
சரிவாகி விண்ணிருந்து தேவர் கூட்டம்
தப யவர் இல்லத்தில் பாய்ந்தார் ஆங்கே!
தவித்திட்டார் விசுவாவும்! அதனைக் கண்டு
சபலாவை வீழ்த்திவிட முயல லுற்றார்!
சாய்வாக்கி வில்லதனை அம்பும் சேர்த்தார்! 341

தூரத்தில் சபலாவும் போரில் மூழ்கி
துள்ளியது! பொங்கியது! விசுவா தம்மை
ஆரவாரக் கூச்சலிலே காண வில்லை!
அதுகண்டார் வசிட்டருந்தான்! பாய்ந்தார் அங்கே!
பேரரவம் கேட்டதுவே! பெருமை மிக்க
பெருமுனிவர்! பிரம்மதேவர் அருளால் பெற்ற
பேரரவ தவஆற்றல் கொண்டோர் ஆவார்!
பெரிதான அவர்போரை விசுவா ஏற்றார்! 342

அத்திரங்கள் பலகாற்றில் பறந்த தாலே
அத்தனையும் வீரமுடன் சென்ற தங்கே!
சத்தமிலாப் பலசரங்கள் வசிட்டர் விட்டார்!
சத்தமுடன் மித்திரரும் அதனை வென்றார்!
இத்தரையும் அதுகண்டு மலைத்த தங்கே!
இறவாத பலவரங்கள் வசிட்டர் பெற்று
வித்தகமும் வித்தையதும் சேர்த்தார்! பொங்கி
விசுவாவும் வில்லெடுத்தார்! வீரம் அன்றோ! 343

பிரம்ம அஸ்திரத்தைக் வசிட்டர் போட்டாரி!
...குலைந்து விசுவாவும் கலைந்தே போனார!
...அவர்வரங்கள் வென்று வென்று
...ழ்ந்ததுவே வெற்றியுடன்! ஓரம் தன்னில்
...இருந்த மரங்கூட அதிலே பற்றி
பரப்பியது தியதனை! வீரர் கூட்டம்
... குலைந்தோடி பாய்ந்து சென்று
...லே நின்றிடவே முயன்ற தங்கே! 344

...துண்ட விசுவாவும் அறிந்திருந்த
...லவுமிகு வரம்கொண்டு அத்திரங்கள்
... கோபத்தால் சிவக்க நின்று
...டைந்தெடுத்து வீசிவிட்டாரர்! ஆனால் கூட
...ஏதும் செய்யவில்லை வசிட்டர் தம்மை!
...வர்யாரோ? பிரம்மரிஷி! விண்ணை வென்றோர்!
... துவிகுமாரய்ப் போராட்டம் செய்ய வந்து
பொங்கியங்கே விசுவாவும் பாய லானார்! 345

சரமெடுத்தார்; அம்பெடுத்தார்: சாத்தி ரத்தைச்
...ரியாக விட்டெறிந்தார்; குடிசை யோரம்
...ரெல்லாம் பற்றியதே! தீயும் பாய்ந்து
மயக்கியது சீடர்களை! சபலா கூட
...ரசரையே விட்டுவிட்டுத் தூர ஓடி
...எடுத்து வீரர்களை விரட்டி நிற்க,
...ரமான வேறுசில சரமெடுத்து
...மாக விட்டெறிந்தார்! மீண்டும் ஆங்கே! 347

வசிட்டரதை ஆய்ந்துணர்ந்தார்! எதையும் வெல்லும்
வளர்ந்திருந்த மாமுனிவர்! ஆத லாலே
சரிகின்ற தீநாக்கை அணைப்ப தற்குக்
...டும்சரத்தை விட்டெறிந்தார்! அதுவும் ஆங்கே

நகித்துவிடத் தீதழலை, மழையாய்க் கொட்டி
நலம்கொடுக்க முயன்றதுவே! குடிசை எல்லாம்
கசிவதனில் இருந்தங்கே பிழைத்தல் பெற்று
காசினியில் உயர்ந்ததுவே! தவத்தின் ஆற்றல்! 348

மழைபெய்ய தன்சரங்கள் மடிந்த தாலே
மகத்தான பெருங்கோபம் கொண்டார் அங்கே,
தழைத்தெழுந்த மித்திரரும்! உடனே தானும்
தகர்க்கின்ற பொடியாக்கும் சரத்தை அள்ளி
பிழைப்பதனைச் சாய்த்துவிட விட்டார்: ஆங்கே
பிறந்ததுவே பேரோசை! வானில் எங்கும்
தழைத்ததுவே தூசிபடை! பறந்து சென்று
தாக்கிற்று வசிட்டரையே! சீடர் தம்மை! 349

ஆண்மைமிகு வசிட்டருக்கே அந்தச் சாபம்
அசைவதனைக் கொடுக்கவில்லை! அவரோ துள்ளி
மாண்டுவிட வீரரெலாம் சபித்தார் அங்கே!
மடிந்தார்கள் படைவீரர்! பிணமாய்ச் சாய்ந்து
தாண்டுகிற வழியறியாக் குருடன் போலத்
தவித்தங்கே வீழ்ந்தார்கள்! இறந்தே போனார்!
வேண்டுதலோ அங்கில்லே! விளக்கம் இல்லை!
விண்ணவரே அதிசயித்தார்! கண்டார் காட்சி! 350

ஓடுகிற சிலவீரர் ஒடிந்து வீழ்ந்தார்!
ஒடிந்துவிடும் அவர்மேலே குதிரை ஏறித்
தேடுகிற நிலையினிலே தவித்த தங்கே!
திகைத்தனவே பிளறலிலே யானைக் கூட்டம்!
போடுகிற அந்தசரம் பொங்கிப் பாய
பொல்லாத தேர்க்கூட்டம் சரிந்த தங்கே!
வாடுகிற சிகம்காட்டி மண்ணில் சாய்ந்த
மாவீரர் வாய்ப்பிளந்து பிணத்தில் சேர்ந்தார்! 351

சேர்ந்திருந்த அக்கூட்டம் மெள்ள மெள்ள
சித்திரவ தைதனில் சிக்கிச் சிக்கிப்
பார்வையது மழுங்கிவிட பாதை யோரம்
பலவாகப் பகைகாட்ட பதைப்பும் காட்ட
கார்கால தவளைகள்போல் கத்தல் செய்து
கால்சறுக்கி, உடல்சரிந்து கவிழ்ந்து போக
வார்க்கின்ற மழைச்சேற்றில் உடலம் எல்லாம்
மக்கியதே மடிந்ததுவே! பிணத்தின் நாற்றம்! 352

வெள்ளங்கள் ஓடல்போல் ஓங்கி ஓங்கி
வெந்துவிட்ட உயிரனங்கள் கழிந்த தங்கே!
தள்ளிவிட்ட வெறுஞ்சுள்ளி கட்டுப் போல
தகர்ந்துபெரும் பிணக்கட்டு ஓடிற் றங்கே!
மன்னர்களும் ஒன்றாகி மடிந்த தாலே
மதிப்பில்லாக் கயவர்போல் பிணம்ஓ டிற்று!
துள்ளலெலாம் அடங்கிவிட, தேரும் வெட்டித்
துவளலிலே ஓடிற்று! போரின் காட்சி 353

கொள்ளையிட்ட சபலாவின் செல்வ மெல்லாம்
கோடியிலே கழிந்தோட செல்ல லாகி
தள்ளிவிட்ட எலும்புகளும் குவிப்பாய் ஆகி
தகர்ந்திருக்க, சேர்ந்திருக்க மிகுதி யாகி
பள்ளத்து நீரினிலே குருதி பாய
பாதையெலாம் சிவப்பாகி, கறையும் ஆகி
அள்ளுகிற வழியறியா வீரர் எல்லாம்
அழிந்தோடி தொலைந்தார்கள்! துன்பம் எங்கும்! 354

எத்தனையோ சரம்விட்டும் விசுவா அங்கே
எண்ணிக்கை இல்லாத தோல்வி கண்டார்!
கத்திகளில், அம்புகளில், வில்லின் சேர்ப்பில்,
கதிகலக்கும் ஈட்டிகளில், கேடய

எத்தனைத்தான் மந்திரங்கள் போட்டு போட்டு
எடுத்ததனை விட்டாலும், பயனே இன்றி
சத்தமிலா வெறுமையிலே வீழ்ந்த தாலே
சிரித்துவிட்டார் மித்திரரும்! திகைத்தே போனார்! 355

"மித்திரரே! என்னிடத்தில் வீரம் காட்டி
மிகையாக ஏதேதோ செய்தீர் இன்று
பத்திரமாய்த் திரும்புங்கள்! தலையில் உள்ள
பாரமிகு முடிகவிழும்! உடைந்தே போகும்!
குத்தகைக்கு நிலம்எடுத்தல் போல என்னைக்
குறிபார்த்து வாள்முனையில் குத்த எண்ணித்
தத்தளிப்பில் ஆழ்ந்தீர்கள்! மன்னித் தேன்நான்!
தவறிழைக்க வேண்டாமே செல்வீர்" என்றார்! 356

"வித்தகரே விண் அடக்கி வென்றுவிட்ட
வித்தைமிகு பெருமுனிவ! தோனே! நன்றே!
இத்தரையில் இதுவரையில் விசுவா என்றும்
இடந்தாங்கி வீழ்ந்ததிலை சரித்த தில்லே!
சுத்தமிகு வீரன்நான் அச்சம் இல்லை!
சூரியனும் சந்திரனும் வந்தால் கூட
வித்தகனாய்ப் போரிடுவேன்! நிற்பேன் நானே!
விளையாட்டு போதுமினி அம்பெடுப்பீர்"! 357

என்றங்கே விசுவநாதன் கூவல் இட்டார்!
எழுந்ததுவே விண்ணதிலே முழக்கம்! அங்கே
முன்நின்ற வீரரெலாம் மீண்டும் ஆர்த்தார்!
முகம்நிமிர்ந்து அம்பெடுக்க முனைப்பில் சேர்ந்தார்!
தன்னுடைய வீரத்தை வித்தை தன்னைத்
தவராது சேர்த்துடனே விசுவர் பொங்கி
மன்னரது மானத்தை, மதிப்பைக் காக்க
மயங்காமல் போர்த்தொடரத் தொடங்க லானார்! 358

தேர்கொணர்ந்து அதில்ஏறி அமர்ந்த போது
திக்கெல்லாம் அதிர்ந்ததுவே! கிழக்கின் வானம்
கார்மிகுந்து வெடிப்பதுபோல் சத்தம் செய்து
கலங்கியது; மேற்கினிலே இருந்த தேவர்
தேர்ஓசை கேட்டுவிட்டு ஓடி வந்து
திசைமூடி நின்றுவிட கலங்கி னார்கள்!
பேர்அதிர்ச்சி! பேர்ஓசை! பெரிய பாய்ச்சல்!
பெயர்ந்துவிட மண்ணதுவும் பிளந்த தங்கே! 359

நீள்குதிரைக் குதித்தோடி முன்னால் பாய,
நீட்சிமிகு வில்லம்பு எழுச்சி கொள்ள
மாள்கின்ற ஆட்சியினைக் காக்க அங்கே
மதிநீபோடு போரிட்டார் மன்னர்; வேக
கோல்பொறிபோல் சரம்ஓட, ஈட்டி, ஓட
கொல்லும்வழி அறியாது இருவர் அங்கே
மாள்வதனின் வழியதனில் வளைத்து நின்றார்!
மமதைமிகு தவம்-அரசு மோதிற் றங்கே! 360

ஓர்ஓரம் பாய்ந்துவிட்ட சபலா தானும்
ஓர்பெரிய வீரத்தைக் காட்டிக் காட்டி
நேர்வழியில் அனைவரையும் போரில் வென்று
நிற்கின்ற போதங்கே, தேரில் நின்ற
கூர்மைமிகு விசுவர்வும் கோப முற்று
குறிபார்த்தார் வசிட்டரையே! தோல்வி தோன்றி
சீர்குன்றி சரிந்துவிடத் தொடங்க லானார்!
சித்திரங்கள் அழித்தாற்போல் படைபோ யிற்று! 361

சுனைபொங்கி வழிந்தாற்போல், வசிட்டர் அங்கே
சொல்லாற்றும் நிலைபோக்கி சரமும் விட்டார்!
முனைமழுங்கா பிரம்மர்வழி அத்தி ரத்தை
மூவுலடும் போற்றுமந்த அத்தி ரத்தை

நனைத்தெடுத்துத் தெய்வீகம் தெளித்து வைத்து
நடுங்கவைக்கும் ஆற்றல்மிகு அத்தி ரத்தை
நினைத்துவிடும் ஒருகணத்தில் வசிட்டர் பெற்றார்!
நீள்நிலமும் பெருங்கடலும் கலங்கிற் றங்கே! 362

அத்திரந்தான் ஒளிர்ந்த தங்கே.
தெய்வவழி வந்துவிட்ட ஆயு தத்தைப்
பார்த்துவிட்ட வீரர்களும், விண்ணவர் யாரும்
"பழிஏதோ? பாவந்தான் ஏதோ? ஏதோ?
ஆர்த்தெழுந்தார் பிரம்மரிஷி! நாசம்! நாசம்!
அவர்எடுத்தார் பிரம்மர்வழி ஆயு தத்தை!
கார்கலங்கும்; கண்ணிருலும்! காட்சி மாறும்!
காசினியும் கவிழ்ந்துவிடும்! பிரம்மா அன்றோ?'

காட்சிகண்ட வானவரின் படைவீ ரர்கள்
கண்ணெல்லாம் கசிந்துவிட நினைத்து நின்றார்!
மாட்சிமிகு பேரரசர், மாண்பு மிக்க
மாதவத்தின் பேரரசர் போரில் ஆழ்ந்து
காட்சிக்குக் கொடுமையதை ஆக்கி வைத்தார்!
கலைவிற்கோ வழிஇல்லை! வீரம் அங்கே
போட்சத்தைக் கவிழ்த்தாட்ட நின்ற தங்கே!
மோனமதோ அரசதனை ஆட்டிற் றங்கே! 364

அந்தபெருங் காட்டினிலே சூழ்ந்து விட்ட
அடைவில்லாப் பெரும்போரைக் கண்டு கண்டு
தந்தங்கள் உரசிவிட யானை யெல்லாம்
தவிர்த்துவிட்டு இடமதனை ஓடிற் றங்கே!
வித்தைமிகு போர்க்களத்தின் வீச்சில் நின்று
வீசிவிட கருவிகளைத் தேரும் கூட
பந்தம்விட்டுப் பாசம்விட்டுக் காதல் விட்டுப்
பறந்ததுவே! விசுவாவின் போரே ஆகும்! 365

தேர்சார்ந்த மித்திரரின் எழுச்சிக் கோலம்
தேர்ந்துவிட, பேர்ந்துவிட, மண்ணும் அங்கே
வார்ந்திடவே, தேங்கிடவே, தாங்கித் தாங்கி
வளர்ந்திடவே ஓசைகளின் வேகம் ஆசி
கோர்வையிலே நீள்வரிசை சரங்கள் எல்லாம்
கொந்தளிக்க, கோபுரமாய் வானில் தோன்ற
நாரிபின்னி வளைந்திட்ட, மலர்கள் போல
நாடெல்லாம் தெரிந்ததுவே! வித்தை அன்றோ? 366

அத்தகைய போரதனைக் கண்ட போது
அலைகழிந்து, நிலைகுலைந்து மண்ணில் வீழ்ந்து
சத்தமிலா மொழியினிலே பேசிப் பேசி,
சாத்திரத்து வசிட்டருந்தான் வலைய வந்தார்!
மெத்தெனவே அவர் அங்கே பிரம்மர் தந்த
மிகவல்ல ஆயுதத்தை விட்ட போது,
எத்தனையோ களம்கண்ட மன்னர் ஏற்க
ஏற்றமது இல்லாது வீழ்ந்தே விட்டார்! 367

பிரம்மர்வழி ஆயுதந்தான்! அத்தி ரந்தான்!
பிடிக்குள்ளே அடங்காத அதுவும் சென்று
கரஓசை சீடரெலாம் செய்து நிற்க
கலைத்ததுவே விசுவாவின் வில்லை! அம்பை!
பரபரப்பாய் யாவருமே சோர்வில் ஆழ,
பகைபொங்கி விரத்தின் வெறியில் மூழ்கி
கரம்காட்டிக் கொலை ஓசை செய்த தாலே
காலத்தின் ஓலந்தான் ஆர்த்த தங்கே! 368

விண்ணிருள, மண்ணிருள, காட்டில் எங்கும்
விசையான இருளினது வாடை தேங்க
கண்ணிருள, வழி இருள, சரங்கள் எல்லாம்
கடைசியிலே இருள அங்கே, ஒளியும் தேய்ந்து

எண்ணமெலாம் இருளிருள, எல்லாம் தேங்கி
எழுச்சியெலாம் வற்றிவிட வீழ்ந்த தங்கே!
தன்மையிலே பேரிருளும் சேர்ந்து கூடித்
தளிர்மையது இழந்ததுவே! அவலக் கபட்சி 369

விண்ணவரே நடுங்கிவிடும் பிரம்மா தந்த
வீரரைவான அத்திரத்தால், உணர்வும்சாய
கண்ணிரண்டும் கடுங்காட்சி தன்னைக் காண
கால்கீழே மண்பிளந்து தேரும் சாய,
விண்மேலே இறைவர்வழி கூட்ட மெல்லாம்
இறங்கிடவே அச்சமுற்று கலக்கம் ஆகி
வெண்மேகத் திரைமூடி நின்றிருந்தார்
வெலவெலத்து வீரர்கள் சுனையில் சாய்ந்தார்! 370

அத்திரத்தை விட்டவுடன் அதிலே கண்ட
அயர்வில்லா ஒளிப்பொறிகள் கிளம்பச் சென்று
இத்தரையின் காட்டினிலே மூலை தோறும்
இழிவாக்கிச், சிதைவாக்கி, சேதம் ஆக்கி
பத்தாகி ஒருசரம்தான் பறந்த தங்கே!
பலகோண மிட்டதுவும் தாக்கிற் றங்கே!
வித்தகரின் அத்திரந்தான் அதுவே அன்றோ?
வினாவுக்கு அதுஒன்றே சான்று கூறும்! 371

உயரத்தில் ஏறியது; இறங்கும் போது,
அங்குபெரு வித்தைகள் காட்டி, நீங்கா
தயக்கத்தைப் போக்கிவிட்டுத், தளர்ச்சி நீக்கித்
தள்ளிவிட்டு ஓரத்தி வீரர் தம்மை,
மயக்கத்தை மித்திரரும் அடைய சென்று
மார்பினிலே தாக்கியது! மன்னர் சாய்ந்தார்!
தயக்கமுடன் அதுதாழ்ந்து இறங்கிற்றங்கே!
அயராமல் விரைவினிலே தாக்கித்தாக்கி! 372

## மங்கை புலம்பல்

அதுகண்ட மங்கையவள் கலங்கிப் போனாள்!
அவர்அருகில் சென்றயர்ந்து உற்றுப் பார்த்தாள்!
மதுஉண்ட மயக்கம்போல் அவரும் அங்கே
மருண்மீது சாய்ந்திருந்தார்! மங்கை மெள்ள
வெதும்பலுடன் அவர்முகத்தைத் துடைத்து வைத்து
வெறுமையுடன், துன்பமுடன் கதற லானாள்!
சதுராட்டம் போலஒரு போரும் செய்து
சாய்ந்துவிட்ட மன்னரைத்தான் வீரர் சூழ்ந்தார். 373

"என்அரசே! என்உள்ளம் விரும்பும் வேந்தே!
எழிற்மிக்க நகரமது போற்றுகின்ற
பொன்னைநிகர் பேரரசே! இந்தக் காட்டில்
போராடி சாய்ந்தீர்கள்! கொடுமை என்னே?
மென்மைமிகு நெஞ்சோடு மக்கள் வாழ
மன்னரெலாம் மகிழ்வோடு பொருள் செலுத்த
தன் செயலால் பலஆற்றல் செய்தால் அன்றோ?
தரணியது உனைவாழ்த்த உள்ள திங்கே" 374

"எப்பொழுதும், எங்கேயும் மக்கள் எல்லாம்
எல்லாமும் பெற்றிடவே பலவும் செய்து
கொப்பளிக்கும் வீரமுடன் பகையை வீழ்த்தி
கோல்காத்துக் குறைபோக்கி, அறமும் வாழ்த்தி
அப்பொழுதே ஆசைகளை அறுத்தொதுக்கி
ஆண்மையுடன் வெல்கின்றாய்! ஆனால் அந்தோ!
தப்பெதுவும் செய்யாமல் வீழ்ந்தே போனார்!
தரணியது தாங்கிடுமா? அழியும் அன்றோ?" 375

கண்களிலே நீர்வடிய, கதுப்பின் ஓரம்
கடைந்தெடுத்த கருமையிலே சுருக்கம் காண
தண்மையெலாம் அழிந்தொழிந்து வெம்மை ஆறாய்த்
தண்ணீரும் கன்னத்தில் கோடு போட,

எண்ணங்கள் அந்தவிழி நீரில் சூழ்ந்து
எழுதாத சித்திரமாய் மார்பும் தோய,
பண்ணொன்று ராகம்தான் சிதைதல் போல
பார்வையவள் அழுதங்கே நின்றி ருந்தாள்! 376

விழியோரம் கசிந்துவரும் நீரில் அங்கே
விண்ணவரும் ஒளிகுறைந்து தெரிந்து நிற்க,
பழியேதும் அறியாமல் மண்ணில் வீழ்ந்த
பாவமிலா மன்னாவர் வீழ்ச்சி யாலே,
கழிந்தோட கார்மேகக் கூந்தல் காற்றில்,
கண்மறைக்க அதுபறந்து முகத்தில் சாட,
எழிற்கோலம் குலைந்தழிந்தாள் மங்கை தானும்!
எழிலுக்கு என்னபொருள்? அவளும் சாய்ந்தாள்! 377

"வறுமையிலே வாடுகிற நாட்டிற் கென்றும்
வளம்காட்ட, வாழ்க்கையது காட்ட காட்ட
மறுமையதை பழியதனை வளைத்துச் சாடி
மண்ணுருண்டு வீழ்ந்தனையே! மன்ன நீதான்!
துறுதுறுத்த விழிஇரண்டும், தூங்கா அந்தத்
துவளாத கரமிரண்டும், நெடிய தோளும்,
அறுந்துவிடும் நிலையடைந்தாய்! அழகோ! இந்த
'ஆ' அதுதான் செய்ததென்ன? காணீர்! காணீர்!" 378

"என்னத்தான் நீகேட்டாய்? நாட்டிற் காக
எழிலான 'ஆ'கேட்டாய்! தவறும் ஏதோ?
இன்னதுதான் தவறென்றும் ஆரா யாமல்
இப்படியா பிரம்மாத்தி ரத்தைக் காட்டித்
துன்பத்தைக் கொடுப்பார்கள்? தூ து! என்னே!
துயரமிது! சாபமிது! தவமோ! அன்றித்
தன்மயமாய் நின்றுவிட்ட செருக்கோ! சொல்வீர்!
தவவாழ்வில் கசகேனு சேர லாமோ?" 379

"என்செய்தார் என் அரசர்? முனிவ, நீயும்
எப்படித்தான் இது செய்தாய்! வானில் உள்ள
அன்பில்லா அக்கடவுள் அதனைக் கண்டு
அமர்ந்துள்ளார் வீணாக! கடவுள் எங்கே?
பின்நின்று, கோழைபோல் பிரம்மர் தந்த
பீடைமிகு அத்திரத்தை மறைவாய் இன்று
துன்பளிக்க வீரன்மேல் விட லாமா?
தூய்மையெலாம் தவவாழ்வின் உண்டோ? உண்டோ?" 380

"ஆட்சியிலே அனைவர்க்கும் நன்மை செய்து,
அடங்காத பலபேரை அடக்கி வைத்துக்
காட்சியிலே எளியோராய்க், கடுஞ்சொல் நீக்கி
கடமையதைத் தன்நிறைவில் மக்கள் கூற
ஆட்சியதில் செய்திட்டார்! சபலர் கேட்டார்!
அதுஇதுவா தண்டனைகள்! அடடா என்னே!
மாட்சியது மறைந்ததுவோ? கடமை வீரர்!
மாய்வதுவும் அறமாமோ? அறமோ? சொல்வீர்?" 381

ஆங்கவலும் நெஞ்சமெலாம் பதற வீழ்ந்து
அனைவரையும் கேட்கையிலே, தேங்கி நின்ற
தாங்காத பெருங்கூட்டம் கூவிற் றங்கே'
தண்மைமிகு நீர்கொணர்ந்து தெளித்தார் அங்கே!
பாங்காக பலவீரர் தாவல் செய்து
பலசெய்யும் வசிட்டர்மேல் தாவிச் செல்ல
ஆங்கன்று முயலுகையில், அவரும் அந்த
அத்திரத்தைத் திருப்பிவிட்டார்! சுருண்டு வீழ்ந்தார்! 382

கதறலுக்குச் செவிசாய்க்க முடியா தங்கே
கரையுடைந்த நதிபோல மன்னர் வீழ்ந்து
பதறலேதும் இல்லாமல் மயக்கம் கொண்டார்!
பணிவிடைகள் பலசெய்தார் வீரர் எல்லாம்!

பதுமாக வீசிவிட்ட அத்தி ரத்தால்
பலநாசம் விளைந்துவிட, ஏது இன்றி
நிதம்நிதமும் அவர்கள்தான் குலைதல் உற்றார்!
நீங்காத கொடுமையது! ஆதல் உண்டோ? 383

கண்மூடி விழுந்திருந்த விசுவா, மெள்ள
கலைந்துவிட மூர்ச்சையது விழித்தார் அங்கே!
கண்முன்னால் மங்கையவள் கலைந்து நின்று
கடைசியிலே அழுதிருந்தாள்! அதனைக் கண்டு
பெண்ணவளின் நிலையதனைத் தேற்றி விட்டுப்
பேர்ஆர்வ மோடவரும் போரில் ஆழ்ந்தார்!
தண்மையதை வீழ்த்திவிட்டு வீரம் பெற்றுத்
தயங்காது அவர்போரில் ஆழ்தல் ஆனார்! 384

## மீண்டும் போா!

தான்கற்ற பலவான சாத்தி ரத்தைத்
தான்அறிந்த இறைவர்களைக் கடவுள் தம்மை,
வான்அறிந்த அத்திரத்தை, விண்ணோர் கண்ட
வீரமிகு ஆயுதத்தை, மந்தி ரத்தைத்,
தான்போற்றி வளர்த்திட்ட தவத்தின் பேரால்
தளராது பொழித்துவிடத் தொடங்க லானார்!
கான்அன்று அதுகண்டு கலங்கி, ஓய்ந்து,
காட்சியதில் தெருட்சியிலே வீழ்ந்த தங்கே! 385

"போர்நடத்தல் இயற்கைதான்! புவியில் என்றும்
போர்இன்றி இருப்பதிலை! ஆனால் கூட
தேர்ஏறி பொங்கிவிட்ட வீரர் தம்மைத்
தோள்ஒடுங்கி வீழ்ந்துவிட செய்தல் இங்கே
ஆர்வமதோ? அழகாமோ? வீழ்ச்சி தன்னை
அடங்காத பிரம்மர்வழி ஆயு தத்தால்
தார்அறுந்து வீழ்ந்துவிட அளித்தல் ஆமோ?
தாங்காது இஞ்ஞாலம்?" என்றார் வீரர்! 386

நடைகாட்டி, படைகாட்டி, நாநி லத்தில்
நாநீட்டி சொல்காட்டி, வசிட்டர் போட்ட
இடைவந்த ஆயுதத்தைப் பிரம்மர் தந்த
இழிவில்லா அத்திரத்தை அடைத்துப் போட
தடைகண்டு, விடைகண்டு, தளர்ச்சி போக்கித்,
தாங்காது அம்பெய்ய தொடங்க லானார்!
புடைத்தெழுந்த அவர்தோள்கள் புதுமை யோடு
போராடத் தொடங்கிற்று? ஆண்மை வீரர்! 387

தேருக்கு முன்னாலே தீர்ந்து விட்ட
திரளான வீரர்களை உற்றுப் பார்த்துப்
'பாருக்கு வந்தகதி ஏதோ' என்று
பதைப்போடு ஆராய்ந்தார் விசுவா! பின்பு
தாருக்கு முன்சூழ்ந்த வண்டைக் கண்டு
தள்ளிவிட்டுப், பாய்ந்தடிக்க முயல லானார்!
காருக்கு மென்தென்றல் படுதல் போல,
கரத்தினிலே சரமழைகள் பொழிந்த தங்கே! 389

சரஓட்டம் காட்டிடவே, சார்ந்து நின்ற
சனகூட்டம் ஓடோடி துடிப்பில் ஆழ,
அரசர்க்கு எழுந்துவிடும் ஆற்றல் காட்டி
அடிமைவழி உடைத்தெறிய முயல லானார்!
பரமர்வழி அத்திரந்தான்; அவரும் ஆய்ந்து
பாங்காக அதுஅறிந்தார்! ஆனால் கூட
பரமரையே வென்றுவிட ஆழ்ந்தே போனார்!
பிரம்மாவாய் இருந்தென்ன? மன்னர் அன்றோ? 390

அடித்தசரம் அடிவாங்கி விழுதல் கண்டார்!
அளந்தசரம் அடிசறுக்கி தேயக் கண்டார்!
மடிந்தசரம் மடிந்தங்கே மலைக்கக் கண்டார்!
மாண்டசரம் மலையோரம் வீழக் கண்டார்!

வடித்தசரம் வடிந்தங்கே வளையக் கண்டார்!
வளர்ந்தசரம் உலர்ந்தங்கே கழியக்கண்டார்!
குடித்தசரம் உயிர்குடிக்க பொங்கக் கண்டார்!
கூர்மைசரம் கொடிபோல ஓடக் கண்டார்! 391

வாளெடுத்தார்! வாளதுவும் உறையி னின்று
வளம் அளிக்க வாராத நிலையைக் கண்டார்!
மனெடுத்த ஈட்டிமுனை வீணாய் அங்கே
மண்மீது தலைகீழே சாயக் கண்டார்!
தேளெடுத்த கரம்போல, ஏதோ ஒன்று
தெருட்டென்று கொட்டுவதை உணர்ந்து பார்த்தார்!
கோவெனவே பிரம்மர்வழி செய்து விட்ட
கொலையாட்டு—விளையாட்டு என்றே சாய்ந்தார்! 392

தேர்ஓட்ட முயன்றிட்டார்! ஆனால் அந்த
தேரினது சக்கரமோ மண்ணில் பாய்ந்து
கார்மோதல் போலபெரும் சத்தம் காட்டிக்
கரையற்ற ஆறேபோல உடைதல் கண்டார்!
வேர்அற்ற மரம்போல் தேரும் அங்கே
விளையாட்டில் வீழ்ந்துவிட குலந்தார் மன்னர்!
போர் அதுதான் பயங்கரமாய்த் தவமே பொங்கி
பொசுக்கிவிட மன்னரோடு நடந்த போரே! 393

ஆல்போன்ற மாமன்னர் சறுக்கி ஆங்கே
அழிந்தொழிய தொடங்கிடவே காய்ந்து போனார்!
வேன்பற்ற முயன்றிட்ட போது அங்கே
வேல்சிதறி விழுந்தங்கே கரைந்தோ டிற்று!
தோள்மீது குருதிகறை சிதறி சிந்தி
கொலைதோற்றம் காட்டிவிட, விசுவா மெள்ள
தோல்வீழ வாள்வீழ, கொற்றம் வீழ
கொடுமையுடன் சாபத்தால் சாய்ந்தே போனார்!

## வசிட்டரின் பேச்சும் விசுவாமித்திரர் சபதமும்

ஆற்றல்மிகு வசிட்டர்தான் ஆங்கே அன்று
அதுகண்டு பெரும்பேச்சுப் பேச லானார்!
காற்றுக்கு அடித்தசிறு சறுகும் கூட
கலையாமல் அதுகேட்க நின்ற தங்கே!
மாற்றுக்கு ஆயுதங்கள் ஏது மின்றி
மடிவீழ, அடிவாங்கி மாய்ந்த பேர்கள்,
கூற்றுக்கு இரையாகி குவிந்தார் அங்கே!
கூவலிலே வசிட்டருந்தான் மொழிதலுற்றார்! 395

"ஆட்சியிலே நீஆண்ட தெல்லாம் என்னை
அடக்கிடவா? ஒடுக்கிடவா? மன்னா! நீயும்
மாட்சியதை இழந்துவிட்டாய்! அரசர் என்றால்
மண்பதையில் தவம்போற்றி வணங்கல் அன்றோ?
காட்சிக்கு மிகக்கொடுமை விளைத்தாய் இன்றே!
காலுக்குத் தளைபோட முயன்று விட்டாய்!
ஆட்சியது அடிசறுக்கும்! காவி பொங்கி
அடிஎடுத்து வைத்துவிட்டால் நாடே போகும்" 396

"காவிக்கு உலகமொரு தூசு! இந்தக்
கடைவாழ்வும் வெறும்தூசு! பொருளும்தூசு!
நாவிற்கு சுவைகாணும் மன்னா! இந்த
நலம்காணும் காவிற்கு நாஅடக்கம்!
தேவியது அருளுண்டு! ஈசர் வாழ்வின்
தெள்ளமுத அருளுண்டு! பிரம்மர் தந்த
ஆவியதை அழித்துவிடும் அத்தி ரங்கள்
ஆமுண்டு மறந்திட்டாய்! துன்பில் வீழ்ந்தாய்!"

"பாவத்தைத் துடைத்திடுவோம்! பல்லோர் வந்தால்
பசுஅளிக்கும் பொருள்அளிப்போம்! வாழ்வு காட்டி
காவலதை அளித்திடுவோம்! தவத்தின் காவல்!
கல்லானால் அதைமிதித்து உயிரும் தந்து

பாவத்தின் முறிவதனை உடைப்போம்! காப்போம்!
பாரிதினில் தொண்டுசெயல் ஒன்றே பேச்சு
ஆவதெலாம் என்னிடமா! அற்ப மன்னா!
அதுவென்றும் நடக்காது! பாதை விட்டாய்!" 398

"என்னே நீ அழிக்கவிலே! என்றன் கையில்
எடுத்துவிட்ட பிரம்மரையே அழிக்க வந்தாய்!
உன்னைஅதில் பிடிபோட்டு மடக்கி விட்டேன்!
உயிர்ஆக்கும் பிரம்மாவை கட்ட லாமா?
தன்னைநீ உணராது தருக்கி நின்றாய்!
தாங்காது உலகமிது! பிரம்மா தோன்றி!
உன்னைத்தான் அழித்திடவே மொழிந்த தாலே
உனைஅழித்தேன்! ஆக்கும்பெரும் கடவுள்
அன்றோ?" 399

"ஓசையிட்டு நீபேசி நின்றாய்! என்றும்
ஓசையது வெல்லாது! காண்பாய் நீயே!
மாசையது மிகசேர்க்கும்! நெஞ்சை கொல்லும்!
மன்மதனை மலதனில் சேர்த்துக் கட்டும்!
ஆசையதை அளித்துவிடும்! அழிந்தாய் நீயும்!
அதுவெதனால்? அன்புவழி காவி தம்மை
வேசையென விளையாட்டாய் மொழிந்தாய் அன்றோ?
வீரமெலாம் தவம்முன்னால் என்ன செய்யும்?"

"அந்தஒரு பசுகேட்டாய்; 'தெய்வம்' என்றேன்!
'ஆகாது கொடு' என்றாய்! 'முடியா' தென்றேன்!
விந்தையுடன் ஆட்சியது காட்டிப் பேசி
'அடங்குநீயே' எனச்சொன்னாய்' 'வீண்தான்' என்றேன்,
மந்தையுடன் வீரர்களை என்மேல் விட்டு
'மடித்திடுங்கள்' என்றிட்டாய்! மன்னா நீயும்
இந்தகணம் வணங்கிவிடு' என்றே சொன்னேன்!
இழிவாகப் போர்செய்தாய்! வீழ்ந்தாய் வீழ்ந்தாய்!" 401

"தெய்வத்தை ஆவினைத்தான் பிடித்துக்கட்ட
 தெய்வீக பேர்ஆற்றல் வளைத்துக் கட்ட
உய்யும்வழி அறியாமல் போரில் தோய்ந்தாய்!
 உலகமிது போறுத்திடுமா? சபலா அங்கே
வெய்யலுடன் போராட்டம் செய்த தாலே
 வெயில்விழுந்த புழுபோல வீரர் மாண்டார்!
எய்கின்ற சரமின்றி தேரில் நீயும்
 என்னிடத்தில் வீழ்ந்துவிட்டாய்! திரும்பிசெல்வாய்!" 402

"விண்வெடிக்கும்; மண்வெடிக்கும்; மேக மெல்லாம்
 வெடித்துவிட முன்வருமே! கார்மே கங்கள்
தண்மையது இழந்துவிடும்! மழையைக் கொட்டும்!
 தாங்காது உன்நாடு! சிற்றூர் அன்றோ?
கண்சோர, கரம்சோர, நெஞ்சம் சோர,
 கால்சோர, சரமெல்லாம் சோர்ந்து வீழ
எண்ணிக்கை இனிஏனோ? நடப்பாய் நாடு!
 ஏதுமிங்கே நடக்காது தவத்தின் ஆற்றல்!". 403

"வருகின்ற பேருக்கு விருந்து காட்ட
 வளமான பசுஒன்றை இறைவன் தந்தார்!
தருகின்ற வரைக்குமதை வில்லெ டுத்தாய்!
 தளர்வினிலே நீவீழ்ந்தாய்! அறிவாய் இன்றே!
கருகிவிடும்; காய்ந்துவிடும்! வாழ்வும் இங்கே!
 காலையிலே கழிந்தோடும் பனியே போல
இருள்மூடி நீ அழிவாய்; பசுவை கேட்டாய்!
 இதுஎன்ன அரண்மனைவாழ் பசுவா? பார்ப்பாய்!" 404

"அழிவுக்கு முன்வந்து நின்று விட்டாய்!
 ஆற்றலதை வறுமையிலே போக்கி விட்டாய்!
பழிவந்த போதும்நீ பாவம் என்னைப்
 பார்க்கவில்லை! போராட்டம் காணவந்தாய்!

பொழிலுக்குள் பெருஞ்சூறைக் காற்றும் வீசி
பொசுக்கிசிறு மலர்களினைக் கழித்தல் போல்
அழித்திடவே தவமலரை வந்து சேர்ந்தாய்!
ஆகிடுமா? நடந்திடுமா? தெய்வம் அன்றோ?'' 406

''பொன்இருந்தால் என்னபயன் ஏது மில்லே!
பொருள்குவிந்தால் என்னபயன்! ஒன்று மில்லே!
கொன்றுவிட தவமதனைக் குவித்தாய் வீரர்!
கொலைவாழ இடமுண்டா! நீயும் கேட்டாய்!
என்றுமிந்த செருக்கெல்லாம் பயனே இல்லே!
எழுத்தோடு புறமுதுகை வாழ்வில் இன்றே!
வென்றுவிட ஆகாது; பிரம்மர் முன்னால்
வெறும்சாம்பல் நீஆவாய்; நடநீ இன்றே'' 406

''மூச்சையுற்று வீழ்ந்திருந்த விசுவா ஆங்கே
மூவுலகும் துன்பமுற விழித்துப் பார்த்தார்,
கூர்மைமிகு வேல்வில்லும் அருகில் வீழ்ந்து
குலைவினிலே சாய்ந்திருக்க, மங்கை தானும்
ஆர்வமுடன் அழுதிருக்க சூழ்ந்து நின்ற
அவலமிகு வீரரெலாம். தாழ்ந்தி ருக்க
பேர்(ஓ)சை தனைசெய்து பேச லானார்
பெருமைமிகு மித்திரரே! சபதம் செய்தார்! 497

''பெருமுனிவ! மூவுலகும் போற்று கின்ற
பெருஞான ஒளிவேந்தே! நன்றே! நன்றே!
தரும்படிநான் பசுவதனைக் கேட்ட தாலே
தருக்கியேநீ பிரம்மர்வழி அத்தி ரத்தை
அருமைமிகு என்துணைவி கண்ணீர் சிந்த
அடிமைஎன ஆக்கிவிட என்மேல் போட்டாய்!
விரும்புகிற செயலிதுவா? தவமா? அன்றி
விண்போற்றும் உயர்வதுவா? வெட்க மன்றோ?'' 408

"நான்என்ன கேட்டேன்சொல்! நாட்டுக் காக
நலமளிக்க, வாழ்வளிக்க, வறுமை போக்க,
ஆன்கேட்டேன்! அவலமதில் என்ன உண்டு?
அதுகேட்டா வெகுண்டெழுந்தாய்! விந்தை! விந்தை!
நான்என்ன உன்தவமா கேட்டேன்! நீதான்
நதியோரம் மலையோரம் செய்து பெற்ற
கோன்பதவி—பிரம்மரிஷி பதவி தன்னை
கொடுஎன்றா கேட்டேன்நீ! எண்ணிப் பார்! பார்! 409

"மக்களதைச் சொன்னாரிகள்! நானும் கேட்டேன்!
மக்களது மன்னன்நான்! அறியாய் நீயும்?
இக்களத்தில் எனைவீணாய் வம்பு செய்தாய்!
இதுதகுமா? இது அறமா? இதுதான் உள்ள
பக்தியதா? தவ அறமா? உண்மை வாழ்வா?
பார்போற்றும் முனிவரே நீ! பாதை விட்டாய்!
முக்திக்கு வழிதேடும் நிலையில் உள்ள
முனிவரே நீ! நன்றதுதான் செய்தாய்! போ! போ!" 410

"கடமைக்கு இருகண்கள்! அறியாய் போலும்!
கல்லுடைக்கும் வறுவைக்கு வழியைக் காட்டல்!
குடவோலை குடியாட்சி நடத்திக் காட்டல்!
குடிமக்கள் வழிநடந்தேன் நானே! ஆனால்
கடமையதை நீகண்டு வெகுண்டே விட்டாய்!
கயவனென கூறிவிட்டாய்! என்னே நீதி!
மடமையதை மதவாழ்வில் தொலைப்பேன் நானே!
மக்கள்வழி சமயத்தைப் படைப்பேன்! உண்மை!" 411

"எதுஒன்றைக் கேட்டாலும் 'சாபம்' சாபம்'
என்றேதான் மடத்தலைவர் நீட்டுகின்றார்!
எது செய்ய புகுந்தாலும் மதத்தைக் காட்டி
எடுத்தெறிவேன் எனக்கூறி செல்கின் றார்கள்!

புதுமையதை செய்துவிட முனைந்தேன் ஐய!
புதுபசுவை நாட்டுடைமை ஆக்க எண்ணி
இதுகேட்டேன்! நீஇன்று பிரம்மா காட்டி
இடிக்கின்றாய்! இதுஎன்ன அறமோ? சொல்வாய்!" 412

"நாட்டுக்குப் பெருவேந்தன் நானே! இந்த
நடுங்கவைக்கும் சாபத்தைத் தூளாய்ச் செய்வேன்!
காட்டுக்குள் நீஇருந்து வாழ்ந்து வந்து
கல்லாக— தோல்விவர சாபம் போட்டாய்!
வாட்டிவிடும் பிரம்மக்கள் ஆயி ரம்பேர்
வந்தாலும் அச்சமிலை! கடமை செய்வேன்!
கூட்டுக்குள் பறவையதும் சிறக டிக்கும்!
கூவிட்டு எனைஅடிமை ஆக்கு கின்றாய்!" 413

"செல்வங்கள் பெருகிவிட, செல்ல றித்த
சிறுமனங்கள் ஓடிவிட. செம்மை யான
நல்லறங்கள் ஆர்ந்துவிட, நன்மை காண
நாளெல்லாம் முடியேற்றேன்! அரசும் ஏற்றேன்!
பொல்லாத பிரம்மர்வழி அயு தத்தால்
பொல்லாப்பு நீசெய்தாய்! சாபத் தாலே
எல்லாமே தோல்வியுற ஆக்கி விட்டாய்!
எனை வீணன் என்றா நீ நினைத்து விட்டாய்?" 414

"அரசுண்டு; அறமுண்டு; ஆண்மை உண்டு!
ஆளும்திறம் மிகவுண்டு; அன்பும் உண்டு!
அரசுக்கு மக்களது எழுச்சி யுண்டு!
அடிமைஎன எனைகொள்ள முடியா திங்கே!
குரலோசை எழுந்துவிட்டால், குடியே வெல்லும்!
குடிமக்கள் அரசிதுவே! ஆன்றோர் வாக்கே!
கரத்தாலே அத்திரங்கள் வீசி விட்டால்
கடமையது வீழ்ந்திடுமா? சாய்ந்து போமா?" 415

"நல்முனிவ! இன்றைக்கே இப்போ திங்கே
நான்ஒன்று கூறிடுவேன்! என்றன் இந்த
இல்வாழ்வுத் துணையின்மேல் ஆணை யிட்டேன்!
இவ்வுலக மக்கள்மேல் ஆணை இட்டேன்!
தொல்உலகம் படைத்திட்ட பிரம்மா மீதே
தொடர்ந்திட்ட உரையோடு ஆணை யிட்டேன்!
எல்லாம்அவ் வான்உலக இறைவர் மீதே
எழுத்தென்றன் உரையதனை ஆணை இட்டேன்!" 416

"பிரம்மரிஷி! வசிட்டமுனி! வெல்வேன் உன்னை!
பிரம்மாவை நான்காண்பேன்! பிடிப்பேன் நெஞ்சில்!
கரம்கோர்த்து, உடல்குவித்து, உணர்வை வாட்டி,
கல்மீது, கடல்மீது, மலையின் மீது,
நரகத்தின் விளம்பதனின் மீது, அந்த
நாநிலமே காணாத வானின் மீது,
பரமரவர் பாதத்தை நோக்கி நோக்கிப்
பல்லாண்டு அருள்வேண்டால் செய்வேன்! செய்வேன்!"
417

"பலயுகங்கள், பலவாக பெருகி ஓட,
பலவேதம் பாரிதனில் பாட பாட,
பலகாதம் சங்கோசை ஓட ஓட,
பல முனிவர் பெருயாகம் செய்ய செய்ய
பலபெண்டிர் கலைவளர்த்து காட்ட காட்ட
பலமடங்கு செய்யூற்றித் தீயும் ஆர்த்து
பலமாதம் தவம்செய்வேன்! பிரம்மர் தன்னை
பன்மடங்காய்ப் பற்றிடுவேன்! ஆணை! ஆணை! 418

"நானும்ஒரு பிரம்மரிஷி ஆவேன் காண்பாய்!
நாடெல்லாம் நடுநடுங்க, மூவர் வாழும்
ஆனுக்கு அதிபரவர் வாழு கின்ற
அவ்வானும் நடுநடுங்க, எங்கும் உள்ள

கோளுக்கு கோலதுவும் நடுங்கி விழ,
குவலயத்தின் மண்ணெல்லாம் நடுங்கி ச் சாய
நானுன்றன் பிரம்மத்தை வெல்வேன் காண்பாய்!
நானெவரோ மித்திரரே! விசுவா! ஆமாம்!" 419

"விழிமூடி உலகமிதை மறந்தே போவேன்!
வியப்பான நாசியதைக் கட்டல் செய்வேன்!
பழியாற்றும் தோலிதனை வெல்வேன்! என்றும்
பறக்கின்ற செவியிதனை ஆள்வேன் காண்பாய்!
இழிவான நாவிதனை கலைத்து வெல்வேன்!
இவ்வுலகம் என்காலின் கீழே விழும்!
பழியேது? பாவங்கள் ஏது? ஏது?
பாரிதனை வெல்வேன்நான்! பிரம்மா காண்பேன்!" 420

"என்நெஞ்சை என்வழியை அடைக்க வந்தால்
எடுப்பேன்நான் என்யாகத் தீயை அங்கே!
பொன்உருகி போதல்போல் நீயும் போவாய்!
பொழுதெல்லாம் யாகத்தீ எரியும் காண்பாய்!
அன்புருகி நெய்யாகும்; ஆண்மை அங்கே
அத்தீயாய்க் கொழுந்துவிட்டு எரியும் காண்பாய்!
இன்றுன்றன் முன்னாலே வீழ்ந்தேன்! நாளை
இங்குன்னை வென்றிடுவேன்! பிரம்மா காண்பேன்!" 421

"பிரம்மாவே! படைக்கின்ற கடவுள் நீயோ?
பலவாக விண்படைத்தாய்! கோள்ப டைத்தாய்!
வரம்பில்லா வான்படைத்தாய்! விண்ப டைத்தாய்!
வானவரின் மேகங்கள் பலப டைத்தாய்!
சரம்படைத்தாய்! சக்தியதில் புவிப டைத்தாய்!
சாத்திரத்துள் வியப்பாக அருள்ப டைத்தாய்!
வரம்படைத்தாய்! சாபங்கள் நீப டைத்தாய்!
வருவேன்நான்! திறந்திடுவாய் விண்ணின் ஓரம்!" 422

"மண்ணகமே விண்ணகமே! இறைவ ஆகா!
மாதவத்தின் மூவர்களே! வந்தேன் நானே!
எண்ணத்துள். எழுச்சியினுள், ஏற்றம் காண
என்னுடைய ஆன்மாவின் ஒளியைக் காண
விண்ணுக்குள் வாழ்ந்துவிடும் பிரம்மர் தம்மை
விழிமூட பற்றிவிட வந்தேன்! வந்தேன்!
திண்மையுடன் யாகத்தீ செய்ய வந்தேன்!
திரண்டெழுவீர் வீரர்களே! ஆணை! ஆணை!" 423

"தவவாழ்வின் கோனே நீ! உணர்வாய் இன்றே!
தவம்யார்க்கும் பொதுவாகும்! நீதான் பெற்ற
தவபேற்றை யானும்தான் பெறுவேன் ஐய!
தயக்கமிலை! அச்சமிலை! உண்மை சொன்னேன்!
குவலயத்தில் மனிதன்நீ! தவத்தால் யோகி!
குடிபோற்ற யோகவழி பெற்றாய்! வாழ்ந்தாய்!
தவறென்ன அதுநானும் பெற்றால்? இன்றே
தரணியில் பிரம்மரிஷி ஆவேன்! ஆவேன்!" 424

"உடல்உருக்கி உளமுருக்கித் தவங்கள் செய்வேன்,
உடலுள்ளே ஆன்மாவை உருக்கி வைப்பேன்.
கடல்வெள்ளம் வந்தாலும் கவலை இல்லை.
கடவுளரின் திருப்பாதம் துணையே உண்டு!
விடல்ஆகா பந்தங்கள் பாசம் எல்லாம்
விட்டொழிப்பேன்! காமத்தைக் கசடாய் எண்ணி
கடல்அலையில்—ஆம்தவத்தில் அலையில் தள்ளிக்
கழித்திடுவேன்! பிரம்மரிஷி ஆவேன்! ஆவேன்!" 425

"கார்மேகம் விண்ணதிலே மோதும் போதும்
கடையுகமே நடுநடுங்கி மழையின் நீரும்
ஆர்த்தெழுந்து பெய்துவிடும்! இயற்கை அன்றோ?
ஆணவத்தைத் தவச்சாப ஆணவத்தை

வார்த்தெடுத்து வழித்தெடுத்து அழிப்பேன்! நீங்கள்
வாழ்க்கையிதில் பார்ப்பீர்கள்! உண்மை! உண்மை!
கார்மேகம் பொங்கிவிட்டால் தடையும் உண்டோ?
கடையுகத்தை வெல்லபிரம்ம ரிஷியும் ஆவேன்!" 426

"உள்ளத்துள் ஒருகவசம் போட்டுக் கொண்டு,
உண்மையதன் முகம்தேடி செல்வேன்; அங்கே
எள்முனையில் நின்றிடுவேன்! தவமும் செய்வேன்!
ஏகாந்த பெருங்காட்டை அளப்பேன்! அந்த
பள்ளத்தைக் கடந்திடுவேன்! இமய ஓரம்
பலஆண்டு தவங்கிடப்பேன்! பிரம்மா வந்து
அள்ளிஅள்ளி அத்திரங்கள் அளித்துக் காக்க
அன்பொழுக வந்திடுவார்! வீரன் நானே!" 427

மலைபிளந்தால் நதியோடி வடிந்து போனால்
மணல்காற்று அடித்திட்டால் அச்ச மென்ன?
கலைவந்து விரல்அசைந்து நடனம்காட்டி
கண்காட்டி, அழகதனைக் காட்டிக் காட்டி
வலைவிரித்துப் பிடித்தாலும் அச்ச மில்லே!
விரிந்திடுவேன் விண்ணதனை அளப்பேன் நானே!
கலைவந்து காலடியில் சுருளவேண்டும்!
காண்பேன்நான் பிரம்மரிஷி பதவி தன்னை!" 428

"பரப்பிரம்ம யோகத்தை வாழ்வில் கொள்வேன்!
பலவாதம் நான்செய்வேன்! வரங்கள் கொள்வேன்!
திரளான சாபங்கள் கழிப்பேன்! தாங்கி
தத்தளிக்கும் ஆன்மீக ஒளியைக் காண்பேன்!
நரகமதைச் சொர்க்கமென செய்து வைப்பேன்!
நான்படைப்பேன் புதியதொரு விண்ணே! கோலே!
சரம்கொடுத்துத் துரத்துகிறாய்! வருவவேன் மீண்டும்!
சாத்திரத்தில் பிரம்மரிஷி பெறுவேன்! ஆவேன்!" 429

## விசுவாமித்திரரும் மங்கையும் உரையாடல்

சிலகணத்தில் புதியதொரு தேரும் அங்கே
சித்திரமாய் வந்திடவே விசுவா தானும்
குலம்காக்கும் மங்கையவள் கரம்பி டித்துக்
கோகிலங்கள் மரம்மீது புலம்பி நிற்க
செலவதனை மேற்கொண்டார் அரண்ம னைக்கு
செல்லும்வழி எல்லாமே அழுத தங்கே!
கலகங்கள் எப்படியோ நேர்ந்த தாலே
கல்லாகி சிலையாகி மங்கை வீழ்ந்தாள்! 430

தேரோட, வழிநீளம் நீண்ட தங்கே!
தீயாக மென்காற்று சுட்ட தங்கே!
கார்முடி இருந்தாலும், கண்ணில் ஏனோ
கலங்கியது நீரோட்டாம் வெம்மை யாக!
பாரெல்லாம் பெரும்மௌனம் செய்து நின்று
பதைப்பினிலே ஆழ்ந்ததுவே! ஆங்கே மன்னர்
மார்பினிலே வழிந்துவிடும் தோல்வி கண்டு
மங்கையைத்தான் பார்க்காமல் தாழ்ந்தி ருந்தார். 431

மங்கைக்கோ நெஞ்சமெலாம் கதறிற் றங்கே!
மாபெரிய முனிவர்தான் செய்து விட்ட
தங்கலிலா செயலதனை எண்ணி எண்ணித்
தாங்கும்வழி அறியாது கலக்கம் உற்றாள்!
சங்குநிகர் கழுத்தோரம் குழலும் ஆட,
சரிந்துவிடும் குழலோரம் நீடும் வாரிக்க
அங்கவளும் குலைந்திருந்தாள்! தேரும் கூட
அடக்கமுடன் வீழ்ச்சியுடன் சென்ற தங்கே! 432

துள்ளுகிற குதிரைகளில் துவளல் தோன்றி
தொய்வோடு நடந்திடவே, மன்னர் கூட
தள்ளுகிற துன்பத்தின் முனையில் நின்று
தள்ளாடும் விழியோடு, விளம்பல் இன்றி!

என்ணுகிற நினைவோடு தூரம் பார்த்தார்!
எழுச்சியதோ சிறிதுமிலை! குலைவே உண்டு!
மெள்ளஅவர் முகம்நிமிர்த்தி வானைப் பார்த்தார்!
மேதினியோ மிகச்சோர்வில் இருந்த தங்கே! 433

"என்செய்தார் வசிட்டர்தான்" என்றாள் மங்கை!
"எதென்னை வெல்லும்சொல்" என்றார் மன்னர்!
"தன் படையால் வென்றாரே" என்றாள் மங்கை!
"அன்றன்று! பிரம்மாவால் வென்றார்" என்றார்!
"என்னபயன்? தோல்வியேதான்" என்றாள் மங்கை!
"ஏன்நீயும் இதுபோல கூறு கின்றாய்?
தன்வலியால் எனைவெல்ல ஆகா தன்றோ?
தவவலிமை காட்டிவிட்டார்" என்றார் மன்னர்! 434

"தவறென்ன செய்தீர்கள்?" என்றாள் மங்கை!
"தவறுக்கு இருபக்கம் உண்டு அன்றோ?
"கவர்கின்றேன் பசுஎன்று நினைத்தார்; கோபம்!
கழித்துவிட பசுகொள்வேன் என்றால் தானும்
தவறென்று எண்ணிவிட்டார்! தவமே அன்றோ?
தன்நோக்கில் கண்டதது! என்னே! என்னே!
அவம்வந்து சேர்ந்திடவே செய்து விட்டார்!
ஆனாலும் விடமாட்டேன்! வெல்வேன்" என்றார்! 435

"தவமுனிவர் வெகுளுவது அறமோ?" என்றாள்!
"தரணியிதை தவத்தாலே ஆளும் வேந்தர்!
அவம்வந்தால் வெகுண்டெழுவார்! ஆனால் இன்று
அப்படியோர் அவம்எதும் இல்லை! ஏனோ
தவம்பொங்கி வழிந்ததுவே! சபலா கேட்டுத்
தரணியிதில் பெரும்போரே வந்த திங்கே!
சவமானார் பலவீரர் விந்தை! விந்தை!
சரித்திரத்தில் இதுபுதுமை!" என்றார் வேந்தர். 436

"என்னவோதான் புதுமைஎன புகன்றீர், அந்த
எத்தந்தான் பிரம்மாவால் அடித்தார் உம்மை!
மன்னர்க்கு கடமையதைச் செய்தீர் நீங்கள்!
மதிக்காத வசிட்டர்தான் வெகுண்டார்! இந்த
அன்பில்லா அறமில்லாச் செயலைப் பற்றி
அனைவருமே கேட்கவிலை! மௌனம் கொண்டார்!
துன்பத்தைத் தவமுனிவர் அளிக்க லாமா?
துயரத்தை அளித்திடுதல் அழகா?" என்றாள்! 437

தேர்அமர்ந்து சென்றிட்ட விசுவா ஆங்கே
திருமங்கை சொல்கேட்டுச் சிரித்துக் கொண்டார்!
ஆர்வமுடன் களம்மீதில் சபதம் போட்டு
அவர்வந்து சேர்ந்தாலும், அங்கே நின்று
தேர்மெள்ள நகர்ந்துவிட, மங்கைக் காக
தெருட்சியுடன் மனம்நொந்தார்! வசிட்டர் மீது
கூர்மையுடன் சொல்லம்பை வீசா மல்தான்
குவிதலுடன் பேசியவர் சென்றார் தாங்கி! 438

"தவத்திற்கு ஓர்ஆற்றல் உண்டு! அந்தத்
தரணியீதில் தன்விருப்பம் காணும் ஆற்றல்!
அவம்வந்தால், சொல்லெதிர்ப்பு தானும் வந்தால்
அதுஅங்கே பொங்கிவிடும்! சாபம் போகும்!
குவலயமே நடுங்கிவிடும்! முனிவர் அன்றோ?
கொடிஎல்லாம் அதுகண்டு உலரும்! ஆங்கே!
தவறென்று எண்ணிவிடில், வலையா தங்கே
தன்தவத்தைக் காட்டிடுவர்!" என்றார் மன்னர்! 439

"இதுஎன்ன? அவர்செயலை வாழ்த்து கின்றீர்!
இழிவதுதான்" எனச்சொன்னாள் மெல்ல மங்கை!
"இதுவும்தான் நீசொன்னாய்! உண்மை! ஆயின்
இப்படியே சொல்சொல்லி வந்தோ மானால்

புதுவதாக பொங்கிவிடும் துன்பம்! அந்தப்
பொங்கிவிட்ட வசிட்டரை நான் மெள்ள மெள்ள
சதுராடி, தவம்ஆக்கி யாகம் ஆக்கிச்
சத்தியமாய் வென்றிடுவேன்! கவலை வேண்டாம்" 450

என்றவரும் கூறிவிட மங்கை ஆங்கே
எழிலாகப் பறந்திட்ட பறவை தன்னை
புன்சிரிப்பில் பார்த்திட்டாள்! விழியின் ஓரம்
பூமலர்ந்து சிரிப்பதுபோல் அழகின் காட்சி!
தன்கணவர் வீரமொழி கேட்ட போது
தன் இதழ்கள் குவித்தவறும் மகிழ லானால்!
பன்மடங்கு துணிவதனைப் பெற்றாள் மங்கை!
பார் அடக்கும் விசுவாவின் மங்கை அன்றோ? 451

'அங்கேபார்! மான்ஒன்று ஓடும்; ஆனால்
அம்மானின் பின்னாலே பெண்மான் ஏனோ
தங்கிதங்கி நெருடலுடன் ஓடிப் போகும்!
தேடும்அதன் விழிகாண்பாய்! கலக்கம் போலும்!
அங்கிருந்த கலைமானை ஏதோ ஒன்று
அடித்ததுவோ? அதன்சோகம் காண்பாய் நீயும்!
எங்கிருந்தோ ஏதோதான் துன்பம் செய்யும்!
எழில்மானும் அதைவெல்ல முயலும்'' என்றார்! 452

"மானுக்குக் கொம்புண்டு! கலைமான் அன்றோ?
மண்ணிதிலே அதுவெல்ல முயலல் செய்யும்
கானுக்குள் பலமிருகம் உண்டு! உண்டு!
காட்டிவிடும் கொடுமையதை! ஆனால் கூட
மானுக்கும் வீரமது உண்டு காண்பீர்!
மலைப்பின்றி அதுஓடும்! துன்புற் றாலும்
கானுல்லே வெல்லும்வழி தேடும் போலும்''
கண்ஒளிர மங்கையவள் கூற லானாள்! 453

"அடிபடலும் மானுக்கு இயற்கை அன்றோ?"
அவள்தொடர்ந்து கேட்டதினால் மன்னர் கண்டார்.
"பிடிபோட்டு தலையிட்டு வளைத்தால் அத்தப்
பிஞ்சுமன மான்என்ன செய்யும்? என்றும்
கடிதான வழிகண்டு பதுங்கல் செய்யும்!
காட்டிற்குள் பலபுதர்கள் உண்டு அன்றோ?
மடியாமல் காலத்தைக் கருதும்; பின்பு
கலைவடிவின் கொம்பாலே தாக்கும்" என்றார்! 454

"ஓடும்மான் என்செய்யும்?" என்றாள் மங்கை!
"ஓடுவது ஒருநாளில் திரும்பும்" என்றார்!
"காடுஇது மறந்தீரோ?" என்றாள் மங்கை!
"காட்டுவழி மானதுவும்" என்றார் மன்னர்!
"தேடும்பல மிருகம்தான்" என்றாள் மங்கை
"தெரிந்துகொளும் மானதுவும்" என்றார் மன்னர்!
"வாடுவது போர்அன்றோ?" என்றாள் மங்கை!
"வாழ்க்கையிது உணர்வாய்நீ" என்றார் மன்னர்! 455

## தோல்வியும் ஊரின் காட்சியும்

தூரத்தே அரண்மனையின் கோட்டை வாசல்
தூய்மையுடன் தெரிந்ததுவே! ரவீர் கூட்டம்
ஆரவாரம் ஏதுமின்றி இருந்தார்; மௌனம்
அத்தனையும் ஓரிடத்தில் குவிந்தாற் போல
வேரற்ற மரம்வீழ்ந்த தன்மை யாகி
வீரரெலாம் உணர்வின்றி நின்றிருந்தார்.
தோதனைக் கண்டதனால், அவர்கள் அங்கே
திருதிருவென புறம்ஓடி மறைய லானார்! 456

நீள்கோட்டை சுவருண்டு; மதில்கள் உண்டு!
நீள்விழியை விசுவாவும் அதன்மேல் விட்டார்!
ஆள்விழுங்கி அகழிகளின் ஓரம் தன்னில்
அழகான புரவிகளின் ஓட்டம் கண்டார்.
மாள்கின்ற ஆயுதத்தை ஏந்தி கொண்டு
மதில்மேலே சிலவீரர் நடக்கக் கண்டார்!
வாள்சுழற்றிச் சிலவீரர் வாயில் ஓரம்
வளர்பயிற்சி பலசெய்ய கண்டார் வேந்தர்! 457

கோட்டைமதில் மேலேதன் கொடிப றந்து
கொண்டுவிட வானதனை அனைய கண்டார்
காட்டுக்குள் பெற்றுவிட்ட தோல்வி தன்னைக்
கண்இமைகள் படபடக்க துன்பத் தோடு
காட்டுகிற வகையினிலே கொடியும் அங்கே
கலைந்தாடி நிற்றல்போல் மன்னர் கண்டார்!
கோட்டையதன் வெளியெல்லாம் துன்பில் ஆழ்ந்து
கொடியழுவ நிற்றல்போல் மங்கை கண்டாள்! 458

வெற்றியதை வாழ்வினிலே பெற்று பெற்று
வளர்ந்திருந்த விசுவாவின் நெஞ்சம் எல்லாம்
வற்றிவிட கண்டிருந்தார். அங்கே நின்று
வாழ்வதனின் பெருநோக்கம் தன்னைக் கண்டார்!
எற்றைக்கும் பெருவாழ்வின் தன்மை யெல்லாம்
ஏதோ ஓர் இடர்ப்பாட்டால் வளைதல் உண்டு!
விற்கட்டின் முன்கூட சிதையும் அன்றோ?
விளையாட்டு போர்க்களந்தான் வீரம் காட்டும்! 459

நதியோரக் கரையினிலே சிலரும் சேர்ந்து
மண்கிழித்து அடைப்பதிலே உள்ளம் ஆழ்ந்து
'நதிகளிலே கழிந்தோடும் நீரைப் போல
சகதியினை அடைத்துவிட முயலல் கண்டார்!

விதிவந்து பிரம்மாவின் அத்தி ரத்தில்
விளையாடி வீழ்த்திடல் கண்ட தாலே
அதிதுன்பம் அவர்கண்டார்? அகழி கூட
அத்துயரில் தூர்ப்பதுபோல் நெஞ்சில் நொந்தார்! 460

கோட்டைவெளி வாயிலதை இணைத்தாற் போல
கொள்ளுமிடம் உள்ளதனில் கூடி நின்று
கோட்டைவழி பாலமது இருக்கக் கண்டார்
குவிந்தங்கே ஒருகுதிரைத் தலையைத் தாழ்த்தி
மாட்டுகிற சேடமின்றி சோர்வில் சேர்ந்து
மதிலோரம் நடந்துவிடக் கண்டார்! அந்த
வாட்டுகிற துயரமது அவருள் பாய
வாடிவிடும் குதிரையது கண்டார் மன்னர்! 461

அப்போது ஓர்வீரன் கோட்டை மேலே
ஆடியதோர் கொடிபற்றி இறக்கக் கண்டார்!
எப்பொழுதும் வான்தொட்டு பறக்கு மந்த
எழில்கொடியும் வீழ்வதுபோல் கலக்கம் கொண்டார்!
முப்பொழுதும் முரசனிலே மோதி மோதி
முகிழ்த்தெழுந்த கொடியதுவே! ஆனால் அந்தோ!
அப்பொழுது அதுஅங்கே இறங்கி சேர்ந்து
அலைகாற்றில் துடித்ததுவே! மன்னர் சோர்ந்தார்! 462

வில்பிடித்த வீரரெலாம் சுவரின் ஓரம்
விரைவின்றி சோர்வினிலே தளர்வில் தாழ்ந்து
வல்லமையே வளைந்தாற்போல் சென்றார் அங்கே!
வளத்தினிது அழிவதுபோல் நடந்தார் அங்கே!
கல்லோரம் சிலபேர்கள் களைந்து ளைத்துக்
கட்டுகளை புற்கட்டை எடுத்துச் சென்றார்!
எல்லாமே விசையின்றி வீரமின்றி
ஏதோஓர் தளர்வினிலே ஆழ்தல் கண்டார்! 463

வெறுமையது சூழ்ந்ததுவே; சூழல் எல்லாம்
வெந்துவெந்து நோதலிலே தணிய கண்டார்!
முறுவலிலை; முகவோரம் ஆர்வம் இல்லை!
முழுமையது முடிவினிலே பாதி யாமி
அறுந்துவிட்ட தன்மைபோல் ஆழ்மை கண்டார்.
அழகான கோட்டைமதில் அழுவ கண்டார்!
சுறுசுறுப்பின் பொருள்முடங்கி சோர்வாய் ஆகி
சொல்லுக்கும் அப்பாலே வீழக் கண்டார்! 464

அரண்மனையின் உள்ளேபோய் தேரும் நிற்க
அறுந்துவிட்ட சரம்போல மன்னர் மெள்ள
கா்மிரண்டை அசைத்துடனே உள்ளே போனார்!
காவல்மிகு வீரரெல்லாம் பின்னால் போனார்!
குரலினிலே மிகமயக்கம் தேங்கி நிற்க
குலம்காக்கும் மங்கையவள் முன்னாள் சென்றாள்!
திரளான பலவீரர் அதற்குள் சேர்ந்தார்!
திரண்டுவிட்ட சோகமெல்லாம் சேர்ந்த தங்கே! 465

## அந்தபுரக் காட்சி

அந்தபுரம் தனில்நுழைந்தார்! அவரும் அங்கே
அழகான படுக்கையிலே சாய்ந்தார் மெள்ள!
சிந்தையிலே எரிதோன்ற நிமிர்ந்து பார்த்தார்!
சிதைந்துவிட்ட வீரரெலாம் நிற்கக் கண்டார்!
சந்ததமும் துணைநின்ற அவருக் கெல்லாம்
சரிநிகரய்ப் பொருள்அளித்து அனுப்பி வைத்தார்!
சந்தனமும் கரமேந்தி மங்கை வந்தாள்!
சங்குவளை குலுக்கவிட அருக மர்ந்தாள்! 466

சாளரத்தின் வழியங்கே தெரிந்த தாலே
சந்திரனின் ஒளிபாய முயலக் கண்டாள்!
மூளவரும் சோர்வதனை முடித்துக் கட்ட
முகமலரில் புன்சிரிப்பைத் தவழ விட்டு
ஆளஅவர் மார்பினிலே அவளும் சாய்ந்தாள்!
அதுகண்டார் மாமன்னர்! அமைதி யானார்!
தாளஒரு தண்கொடிதான் அருகி ருக்க
தண்மையதில் நனைந்திட்டார்! வெம்மை
அன்றோ? 467

அகிற்புகையை ஆர்த்தெடுத்தாள்; அன்பில் தோய்ந்து
அளந்தெடுத்து மலர்களினை குளிக்கச் செய்தாள்!
தகித்துவிடும் சோகமது மலரின் அந்தத்
தண்இதழில் நனைந்ததனால் அடக்கம் கண்டு
மகிழ்வினிலே ஆழ்ந்ததுவே மெள்ள மெள்ள
மடல்விரித்தாள் தாழையது! மணத்தைக் கொட்ட
சகியாது பெருந்துன்பம் ஓடக் கண்டார்!
சந்தனத்தின் மணமன்றோ? சாரும்! ஊறும்! 468

விளக்கேற்றி வைத்துவிட்டாய்; இனி அந்த
வியப்பான மெல்லொளிதான் அறையுள் பாய்ந்து
தளர்ச்சிக்குப் புதுராகம் பாடி வைக்க,
தன்சோர்வை மறந்திருந்தார் மன்னர் அங்கே!
களம்கண்ட தோல்விக்குப் பெண் அளித்த
களம்வந்து சேர்ந்ததினால் இன்பம் கண்டார்!
தளம்அதுதான்! வாழ்வினது தளமே ஆகும்!
தாங்கிவிடும் பெண்மையது துயரின் வாடை! 469

மன்னரது விழிகளிலே சோர்வின் சாயல்
மயக்கமெலாம் தெரிந்துவிட, மங்கை கண்டு
தன்னுடைய வீணையதை எடுத்து வந்தாள்
தழங்கிவிடும் இசைபாட தொடங்க லானாள்,

மென்குரலில், மெல்வீணை நரம்பின் ஓட்டம்
மெலிந்தங்கே கடந்தோடி நடந்த போது,
தன்விழிகள் மூடிவிட மன்னர் சாய்ந்து
தன்தோல்வி வரலாற்றை நினைத்துப் பார்த்தார்! 470

இனிமையது! இதழ்சுவையை வெல்லும் ஆற்றல்!
இடைசுகத்தில் நெரிசலதை முறித்துப் போட்டுப்
பனியர்கி நெஞ்சுணர்வனவ ஆர்க்கும் ஆற்றல்!
பாங்கான் எழில் நரம்பின் அசைவிஜி ஓட்டம்!
தனியாகி தகைமையது, நெஞ்சில் தோன்ற
தாவிரச உணர்வுகளின் கலவை எல்லாம்
மனிதத்தை இழுத்துவிடும் அரிய ஆற்றல்,
மங்கையவர் இதழ்சேர்த்துப் பாட லானாள்! 471

இசைவழிந்து பொங்கிற்று! இன்பப் பாய்ச்சல்!
இனிமைக்குச் சாஎரம்தான் வைத்தாற் போல
அசைவினிலே அலைவினிலே நரம்பின் நாதம்
அமைந்தாடி நெஞ்சத்தை நெருடல் செய்து
விசையாகி, உணர்வதனை வில்லாய் ஆக்கி,
விந்தைமிகு சூழலதைப் படைத்த தங்கே!
கசிந்தோடி துன்பத்தின் கோடு எல்லாம்
கரைந்ததுவே! பெண்மையது இசையே அன்றோ! 472

விரல்நுனிகள் தந்திகளை மீட்ட மீட்ட,
வீண்காற்றின் மென்முளைகள் வீச வீச
நரம்புகளில் நர்த்தனங்கள் பாட பாட,
நரநுனியில் நடனங்கள் கூட கூட
கரம்கோர்த்த வீணையது தோங்க தோங்க
கலையாத விழியோரம் தூங்க தூங்க
சிரம்பட்ட துயரங்கள் மாய மாய
சத்தமிலா இன்பமதில் மன்னர் ஆழ்ந்தார்! 473

அன்பினிலே 'அழகுணர்வு குழைந்து சரிய
அருளுணர்வில் இசைமென்மை இழைந்து பரிய
துன்பமெல்லாம் தூசாகி தொலைந்து ஓட
துயரத்து சிலமுனைகள் கலைந்து தேட,
மன்பதையின் வெளிதனிலே முகிழ்வும் ஆட
மகிழ்வதனின் சிறுதுளிகள் நினைவில் பாட
மென்மைக்கு உருவமதை அளித்தல் போல
மங்கையவள் விழிசாய்த்து பார்த்தாள் அங்கே! 474

தன்மையது தாவிற்று; வெம்மை மூச்சு
தள்ளாடி ஓடிற்று; இனிய எண்ணம்
அண்மையிலே தோங்கிற்று; அலசல் காற்று!
ஆழ்மையது தோங்கிற்று! அமைதி ஓட்டம்!
பெண்மயிலின் தூரத்து அழகை அங்கே
பெருமையுடன் விசுவாவும் கண்டார்! கண்டு
எண்ணத்தில் நல்லுணர்வை பெற்றுத் தேர்ந்தார்!
எழில்வீணை கரமிருக்க உள்ளம் ஆழ்ந்தார்! 476

அகிற்புகையின் மெல்லியதோர் மூடல் தோன்றி
அந்தஅறை உணர்வுவழி நின்ற தங்கே.
துகிலெடுத்து மாமன்னர் வீசி வைத்தார்.
துவண்டோடி புகைமூட்ட ம் ஓடிற் றங்கே!
முகில்வானில் மூடல்போல், அறையில் எல்லாம்
அமைந்ததொரு நிழல்ஒளியில் நின்ற தங்கே!
தகித்துவிடும் தாபமது தீர்தல் போல
தன்வீணை ஒலிஎழுப்பி மங்கை ஆழ்ந்தாள்! 477

"வீணையொலி மிகநன்று" என்றார் மன்னர்!
"வீண்புகழே!" எனச்சொன்னாள் மங்கை நல்லாள்.
"ஆணையது" பொய்யில்லை! அழகே!" என்றார்
"அதற்கில்லை! துன்பத்தில் அழகா" என்றாள்!

"வினைக்குத் துன்பமென்ன?" என்றார் மன்னர்!
''வினைக்குத் துயரில்லை; நெஞ்சில் அன்றோ
"ஆணையதை இட்டீர்கள்! துன்பம் தந்தீர்;
அதற்கென்ன பொருளதுவோ?" என்றாள் மங்கை! 477

''அடங்காத அரசிதனை அத்தி ரத்தால்
அவர் அடக்கிப் போட்டுவிட்டார்! கண்டாய் நீயும்!
நடக்கின்றேன் இனிநானும் தவத்தை நோக்கி!
நானென்ன இழிந்தவனா? மன்னன் அன்றோ?
அடல்கின்றேன் பிரம்மாவை! தவத்தால் வெல்வேன்!
அவர்வருவார்; பிரம்மாத்தி ரத்தைத் தந்து
கடல்தாண்ட, மலைதண்ட, விண்ணை தாண்ட
கடவுளென எனைச்செய்வார்'' என்றார் மன்னர்! 478

அதுகேட்டாள் மங்கையவள்! சிரித்தே விட்டாள்!
"அந்தபெரு சொல்சொல்லி என்னை இங்கே
மதுவுண்ட வண்டாக்கி விடவா செய்வீர்?
மன்பதையில் பெண்ணுக்குக் கணவன் அன்றோ
மதுவாகும்! அவன்இன்றி பெண்தான் வாழ்ந்து
மதிப்பதுவும் வந்திடுமா? வருவேன் நானும்!
இதுஎன்றன் விருப்பம்தான்! என்ன சொல்வீர்"
இதழ்விரித்து மங்கையவள் கூற லானாள்! 479

புகைமூட்ட நடுவினிலே புனித மான
புகழ்விரும்பா இருநெஞ்சம் கலந்த தங்கே!
தகைமையவை நாடிடவே தளிர்மை தன்னில்
தன்கருத்தை கூறியங்கே மோதல் செய்ய
திகைப்பினிலே அவர்ஆழ்ந்தார்! மெள்ள நோக்கி
திருப்பார்வை தனைச்சேர்த்தார் மங்கை மீது!
புகைபோல சிறுமூட்டம் தோன்றிற் றங்கே!
புதுமையது பெண்ணவளின் சொல்லே அன்றோ? 480

"உன்பேச்சு மிகபுதுமை! தவங்கள் செய்ய
உலகமிதை விடும்போது நீயெ தற்கு?
மென்மையது அருதிருப்பின் தவமே போகும்!
மெல்லியளால் இடைதிரும்பி வளைந்தால் அங்கே
என்நிற்கும்? தவமிதுவும், யாகம் கூட
என்றைக்கும் தாங்காது! வீழ்ந்தே போகும்!
புன்சிரிப்பில் உடல்ஒழுக்கம் கலையு மன்றோ?
பூமிஇது தாங்காது" மன்னர் சொன்னார்? 481

"அரசிக்கு என்னபணி?" என்றாள் மங்கை!
"அரண்மனையைக் காத்திடுதல்" என்றார் மன்னர்!
"பரபரப்பாய்ச் சொல்கின்றீர்! விந்தை! அந்தப்
பாதையது தவறாகும்! மன்னர் செல்லும்
வரலாற்றின் பின்னாலே சுவடு காட்ட
வருவதுதான் அரசியது பணியே! அன்றோ?"
திரண்டெழுந்த இன்குரலில் அவளும் சொன்னாள்!
திகைப்போடு மாமன்னர் கண்டார் அங்கே! 482

"நன்றன்று நீகூறல்" என்றார் மன்னர்!
"நான்என்ன கூறிவிட்டேன்" என்றாள் மங்கை!
"என்னோடு வருவேன்நான் என்றால் நானும்
என்செய்வேன் சொல்வாய் நீ?" என்றார் மன்னர்!
"பின்சென்றால் துயரன்றோ?" என்றாள் மங்கை.
"பின்நின்றால் என்கடமை செய்வேன்" என்றார்!
"இன்பத்தின் துளிஇன்றி இருந்தும் என்ன?
இக்காடு வந்திடுவேன்" என்றாள் மங்கை! 483

"காடுவர முயல்கின்றாய்! அகா (து)என்றார்!
"காலிரண்டும் ஓடிவரும்" என்றாள் மங்கை!
"நாடுஇது! வீணாகும்!" என்றார் மன்னர்.
"நல்மகனும் உள்ளானே" என்றாள் மங்கை!

"தேடுவது தவமன்றோ?" என்றார் மன்னர்.
"திகைப்பதுவும் பெண்ணன்றோ?" என்றாள் மங்கை.
"கோடுவரும்; நதிகள்வரும்" என்றாள் மன்னர்
கொடுமையிலை! கணவன்வழி உண்டு" என்றாள்! 484

"கணவர்க்குக் காட்டினிலே மனைவி கூட
கவலைகளை அளித்திடுவள்! உணர்வாய்" என்றார்.
"மணமதுதான் ஆனபின்னே விடுதல் என்றும்
மகிழ்வன்று; நன்றன்று: வருவேன்" என்றாள்!
"கணங்கணமும் துயர்பெருகும்" என்றார் மன்னர்!
"கணங்கணமும் பிரிவதுதான் கொள்லும்" என்றாள்;
"தணலாகி காமமது தகிக்கும்" என்றார்!
"தாங்கிடவே பெண்வேண்டும்" என்றாள் மங்கை! 485

"அடடாநீ என்சொன்னாய்! நன்றே! அந்த
அடங்காத காமத்தை வென்று வென்று
நடந்தங்கே யாகங்கள் செய்ய அன்றோ
நடக்கின்றேன்! மறந்தாயோ?" என்றார் மன்னர்!
அடர்ந்திருக்கும் காட்டினிலே அலையும் போது
அவ்வளவு பெருமரங்கள் நடுவில் மெள்ள
நடந்திடுவாள் ஒருமங்கை! நீங்கள் அங்கே
நங்கையவள் விழிபார்ப்பீர்! வெல்வேன்" என்றாள்! 486

"என்வாழ்க்கை உறுதிமிகு வாழ்க்கை" என்றார்!
"எவ்வுறுதி பெண்முன்னால் நிற்கும்" என்றாள்
"மென்மொழியை நான்வெல்வேன்" என்றார் மன்னர்
"மெல்மொழியோ உமைவிழுங்கும்" என்றாள் மங்கை!
"குன்றாகி நின்றிடுவேன்" என்றார் மன்னர்!
"குலைத்திடுவாள் நடைகாட்டி" என்றாள் மங்கை
"தன்னைநான் அறிந்திடுவேன்" என்றார் மன்னர்!
"தாங்காது உள்ளமது" என்றாள் மங்கை. 487

"செல்லறித்த நெஞ்சத்தைக் கட்ட வேண்டும்;
செல்கின்றேன் தவத்திற்கு" என்றார் மன்னர்.
"வெல்வதுதான் மிகக்கடினம்!" என்றாள் மங்கை!
"வில்லாக வளைத்திடுவேன் உணர்வை" என்றார்.
"மெல்லினங்கள் எழுத்தினிலே ஒலித்தல் போல
மெல்ஒலியாய்க் காமமது வளரும்" என்றாள்!
"வல்லெழுந்தாய் ஓசையதை நானும் செய்து
வென்றிடவே முயன்றிடுவேன்" என்றார் மன்னர்
488

"கற்புக்கு இலக்கணமே கணவன்" என்றாள்!
"காரிகைதான் தவத்திற்கும் துணையே" என்றார்.
"பொற்புடைய தவவாழ்வா? இல்லம் என்ன
பொங்கிவுடல் கூடுமது!" என்றாள் மங்கை!
"மறபலவாய்ப் பெருமைபல கழிதல் கூட
பார்வையவள் வழியாலே! விடுவேன் உன்னை
நற்பெருமை தவம்காண" என்றார் மன்னர்!
"நகைத்துவிடும் உலகமிது" என்றாள் மங்கை! 489

"நகைப்பவர்கள் நகைக்கட்டும்! நலமே காண
நான்செல்வேன் உணைநீக்கி" என்றார் மன்னர்!
"பகைதருவீர் என்வழிக்கு" என்றார் மங்கை!
"பதைப்பதிலே பயனில்லை" என்றார் மன்னர்!
"மிகைபடுத்தி வருவதிலே பயன்தான் என்ன?
மீண்டும்அது வாராது" என்றாள் மங்கை!
"தகைமைக்கு நீமறுப்புக் கூறு நின்றாய்;
தடைஉண்டோ?" என்றாரே மன்னர் அங்கே! 490

"கண்நிறைந்த கணவர்க்குப் பணிகள் செய்து
கடமைகளில் வழுவாமல் வாழ்ந்து வாழ்ந்து
தன்மையதில் நீந்திடுதல் நிலைமை யாகும்!

வண்மைமிகு வாழ்க்கையது அமைய வேண்டின்
வளமிக்க துணைவியவள் அருகி ருந்து
எண்ணிக்கை இல்லாது அன்பு காட்டி
எடுத்திடவே வேண்டுமிந்த வாழ்வை'' என்றாள் 491

''பிரம்மரிஷி எனைஇன்றே எடுத்தெறிந்தார்!
பிரம்மாவின் ஆயுதத்தால்! அறிவாய் அன்றோ?
நரம்பினிலே அதுபாய வீழ்ந்தேன்! ஆனால்
நான்சபதம் செய்துவிட்டேன்! செல்வேன்காடு!
வரலாற்றைப் படைத்திடவே உள்ளேன்! நீயோ
வருகின்றேன் எனச்சொன்னாய்! விந்தை என்று
இரந்துவிடும் மெல்குரலில் சொன்னார் வேந்தர்!
இருந்தங்கே மங்கையவள் துயரம் உற்றாள்! 492

''நான்வருவேன்! உறுதியீது! உம்மை விட்டு
நாணிங்கே வாழேனே! அறியீர் போலும்!
ஆன்கேட்டு வீழ்ந்தீர்கள்! அறிவேன்! அங்கே!
அக்காட்டில் பெருஞ்சாபம் பெறுவீர்! நாளும்
மேன்மேலும் உமைகாப்பேன்! துணையாய் ஆகி!
மேதினியில் துணைவியைத்தான் விழுதல் நன்றோ?
வான்வாழும் இறைவர்களும் காண்பார்! கண்டு
வாழ்விதனை வரத்தாலே தருவார்'' என்றாள்! 493

வெகுநேரம் கடந்ததனால், மன்னர் சோர்வாய்
வெம்மையிரல மூழ்கியங்கே படுத்தார் மெள்ள!
தகுதிமிகு அரசியவள் பணிகள் செய்து
தண்மைமிகு விளக்கதனை அணைத்துவிட்டு
மிகுதுன்பம் மீதூரவிலகி அங்கே
மெத்தென்ற படுக்கையிலே சாய்ந்தாள் மெள்ள!
வெகுவான பெருமௌனம் சேர்ந்த தாலே
விளங்கிற்று அமைதியது ஆங்கே! நாளும் 494

இரவுவர படுக்கையிலே புரண்டிருந்த
    இனிமைமிகு அம்மன்னர் மகனை எண்ணி
அரசாட்சி தனைஅவனின் கரத்தில் தந்து
    ஆளுமையின் தகுதியதை அளித்து விட்டு
விரகத்தை அடக்கிபெருந் தவத்தைச் செய்ய
    விரைவாகச் சென்றுவிட நினைத்தார் ஆங்கே!
அரசாங்க கடமைகளைப் பேச எண்ணி
    அதர்எழுந்தார் !மங்கையவுள் உறங்கிப் போனாள்! 495

மகனிருந்த அந்தபுர அறைக்குள் சென்றார்!
    மகனவனும் தந்தையைத்தன் இருக்கை மீதில்
திகழ்ந்திடவே வைத்துவிட்டு ஓரம் நின்றான்!
    திண்தோளை ஒருமுறையாய் உதறி விட்டு
மகனுக்கு அறிவுரைகள் செய்ய லானார்!
    மகனவனும் அதுகேட்டான்! அமர்ந்து ஆங்கே
மிகவான சூழ்ச்சிகளும் சொன்னார் வேந்தர்!
    மிகுதியுடன் உயில்எழுதி வைத்தார் மீண்டார்! 496

படுத்திருந்த மங்கையைத்தான் உற்றுப் பார்த்தார்!
    பதைப்பின்றி அமைதியினில் ஆழ்ந் திருந்தாள்!
நடுச்சாம நேரமது! விழியில் சோர்ந்து
    நனைக்கின்ற கண்ணீரும் கன்னம் மீதில்
படுக்கையிலே சொட்டிவிட தூங்கிநின்றாள்!
    பார்த்திட்ட மாமன்னர் புன்ன கைத்தார்!
படுத்திருநீ! நான்செல்வேன்! பிரம்மர் கண்டு
    பகைபோக பிரம்மரிஷி பெறுவேன்' என்றார்! 497

அடுத்தகணம் கோட்டைமதில் ஓரம் ஆங்கே
    அடிஎடுத்து ஓடிற்று குதிரை ஒன்று!
நடுச்சாம நேரத்தில் அதனின் ஓட்டம்
    நடுகோட்டை மதில்தன்னை ஓசை தன்னில்

விடுவிக்க முடியாமல் நிறைந்த தங்கே!
விரைவாக அவர்பறந்தார்! காற்றா யாகி!
படுத்திருந்த மங்கையவள் விழித்தாள் பார்த்தாள்!
பார்வையினில் குதிரையது தெரியக் கண்டாள்! 499

'மன்னவர்சென்றிட்டார் போலும்' என்று
மங்கையவள் பதறிட்டான்' துன்பில் வீழ்ந்தாள்;
அன்றைக்கு எங்கோதான் மிகதூ ரத்தில்
அந்தகுதி ரைஓசை கேட்டுக் கேட்டு
மின்னலென அதுபறக்க பதைத்தாள் மங்கை!
மீண்டும்அவள் விழிதிறந்து பார்த்த போது
அன்றங்கே விசுவாவும் மறைந்தே போனார்.
ஆமவரும் பிரம்மரிஷி ஆவார் அன்றோ? 500



இந்த நூலை இயற்றிய சுவாமி விசாலானந்தர் (தா. செ. இரகுபதி) இலக்கியத்தில் எம்.ஏ. பட்டம் பெற்று பி.எச்.டி. பட்டமும் பெற்றுள்ளார். தற்சமயம் ஆந்திர மாநிலத்தில் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்துத் தமிழ்த் துறையில் இணைப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார். படைப்பிலக்கியத்திலும் நல்ல ஆர்வம் உள்ளவர். அவருடைய 'குயில் ஓசை' என்னும் நாவல் ஆந்திர மாநிலத்தில் 'இண்டர் மீடியட்' வகுப்புக்குப் பாட நூலாக வைக்கப் பட்டிருந்தது. கவிதைத் துறையிலேயும் ஆர்வம் மிக்கவர். அவருடைய எழுத்துக்களில் புதிய கண்ணோட்டங்கள் பல இடம் பெற்றிருப்பதைக் காணலாம். சென்னை மாநிலத்தில் தஞ்சையில் உள்ள தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் சில மாதங்கள் டி. லிட். பட்டத்திற்காக உழைத்த உழைப்பும் இவருக்குண்டு. இவருடைய தொண்டு தமிழ் இலக்கியத்திற்கு இனியும் தொடர்ந்து இருக்க வேண்டும் என்று வாழ்த்துகிறோம்.

—பதிப்பகத்தார்